# ஹஜ் - உம்ரா
## வழிகாட்டி


தொகுப்பு:

மவ்லவீ Dr. M.M. அப்துல் காதிர் உமரீ H.H.A., M.D (Acu).,

மவ்லவீ K.P. அப்துர் ரஷீத்

மவ்லவீ H. முஹம்மது சுபைர் ஃபிர்தவ்ஸி



***அல் ஹுதா ஹஜ்சர்வீஸ் (பி) லிட்.,***

***AL-HUDHA HAJ SERVICE (P) Ltd.,***

2/117. Armenian St, Mannady, Chennai - 600 001.
Ph: +91-44-42130338, 42130339. Fax: +91-44-42162595.
Website: www.alhudha.com email: alhudhahaj@gmail.com

# HAJ UMRA VAZHIKAATTI - DATA


- Compiled by:
  **Moulavi Dr. M.M. Abdul Kadir Umari H.H.A., M.D (Acu).,**
  **Moulavi K.P. Abdur Rasheed**
  **Moulavi H. Mohammad Zubair Firdousi**
- Pages : 68+16 Multi Colour = 84
- I[st] Edition : 1429 Hijri (2008)
- II[nd] Edition : 1431 Hijri (2010)

- Type setting and Design by:
  **SAFA GRAPHICS**
  NMG House, 19. Vinayaga Moorthi St, Sathamangalam, Madurai - 625 020.
  Cell: 0452-2527421, 93440-96221, 93609-24499, 93606-26292.
  e-mail: akumari1970@gmail.com

- Published by:
  ***AL-HUDHA HAJ SERVICE (P) Ltd.,***
  2/117. Armenian St, IInd Floor, Mannady, Chennai - 600 001.
  Ph: +91-44-42130338 / 42130339. Fax : +91-44-42162595.
  Website: www.alhudha.com Email: alhudhahaj@gmail.com


இந்நூலில் குறை இருப்பின் அதைச் சுட்டிக்காண்பித்தால்
நன்றியோடு மறுபதிப்பில் திருத்திக் கொள்வோம்.

விற்பனைக்கு அல்ல

# புகுமுன்...

*அன்புடையீர் அஸ்ஸலாமு அலைக்கும்...*

*புனித ஹஜ் உம்ரா பயணத்தை மேற்கொள்ளும் தங்களுக்கு இறைவன் தன் முழுமையான அருளை வழங்குவானாக! உங்களுடன் சில வரிகள்...*

**وَأَتِمُّوا الْحَجَّ وَالْعُمْرَةَ لِلَّهِ**

*ஹஜ்ஜையும், உம்ராவையும் அல்லாஹ்வுக்காக நிறைவேற்றுங்கள்.* ***திருக்குர்ஆன் 2:196***

**وَتَزَوَّدُوا فَإِنَّ خَيْرَ الزَّادِ التَّقْوَى وَاتَّقُونِ يَا أُولِي الْأَلْبَابِ**

*ஹஜ்ஜுக்கு (தேவையானவற்றை) ஆயத்தப்படுத்துங்கள். இவ்வாறு ஆயத்தப்படுத்துவதில் மிகவும் நன்மையானது பயபக்தியே ஆகும்; அறிவுடையோரே! எனக்கே அஞ்சுங்கள்.* ***திருக்குர்ஆன் 2:197***

*இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளில் ஒன்றுதான் ஹஜ் என்னும் வணக்கம். ஒவ்வொரு கடமையும் இறைவனுக்காக நிறைவேற்றப்பட்டால்தான் மறுமையில் வெற்றி பெற முடியும். இது இஸ்லாத்தின் அடிப்படையாகும்.*

*நம்முடைய ஹஜ் மற்றும் உம்ராவை அல்லாஹ் ஏற்றுக் கொள்வதற்கு அவனுடைய கட்டளைப்படி இறைத்தூதர் (ஸல்) செய்து காண்பித்த அடிப்படையில் செய்ய வேண்டும். இஸ்லாத்தில் இது மிக முக்கியமான நிபந்தனையாகும்.*

**عن جابر رضي الله عنه قال**

**رَأَيْتُ النَّبِيَّ صَلَّى اللَّهم عَلَيْهِ وَسَلَّمَ يَرْمِي عَلَى رَاحِلَتِهِ يَوْمَ النَّحْرِ وَيَقُولُ لِتَأْخُذُوا مَنَاسِكَكُمْ فَإِنِّي لَا أَدْرِي لَعَلِّي لَا أَحُجُّ بَعْدَ حَجَّتِي هَذِهِ**

**رواه مسلم رقم الحديث 2286**

*இறைத்தூதர்(ஸல்) துல் ஹஜ் 10 ஆம் நாளன்று தம் வாகனத்தில் அமர்ந்து கல்லெறிந்து கொண்டிருந்ததை நான் பார்த்தேன். அப்போது அவர்கள் "என்னுடைய இந்த ஹஜ்ஜுக்குப் பிறகு நான் மறுபடியும் ஹஜ் செய்வேனா என்பதை நான் அறிய மாட்டேன். எனவே, உங்களின் ஹஜ்ஜை என்னிடமிருந்து கற்றுக் கொள்ளுங்கள்'' எனக் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: ஜாபிர்(ரலி),***
***நூல்: ஸஹீஹ் முஸ்லிம், ஹதீஸ் எண்: 2286***

**عن ابن عمر رضـــي الله عنـــهما**

**قَالَ قَـــدِمَ النَّبِـــيُّ صَـــلَّى اللهُ عَلَيْـــهِ وَسَـــلَّمَ مَكَّـــةَ فَطَـــافَ بِالْبَيْـــتِ ثُـــمَّ صَلَّى رَكْعَتَيْنِ ثُـــمَّ سَـــعَى بَيْـــنَ الصَّـــفَا وَالْمَـــرْوَةِ ثُـــمَّ تَـــلاَ (لَقَدْ كَانَ لَكُمْ فِي رَسُولِ اللَّـــهِ أُسْـــوَةٌ حَسَـــنَةٌ.)**

**رواه صحيح البخاري رقم الحديث1527**

*இறைத்தூதர்(ஸல்) மக்காவிற்கு வந்ததும் கஅபாவைத் தவாஃப் செய்தார்கள். பின்னர் இரண்டு ரக்அத்துக்கள் தொழுதார்கள். அதன்பின்னர் ஸஃபாவுக்கும் மர்வாவுக்கும் இடையே ஸயீ செய்தார்கள். பின்னர் இறைத்தூதரிடத்தில் உங்களுக்கு அழகிய முன்மாதிரி இருக்கிறது (33:21) என்ற இறைவசனத்தை ஓதினார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு உமர்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1527***

*அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் கற்றுக் கொடுத்திருக்கும் முறைக்கு மாற்றமாக ஹஜ் கடமைகளை செய்யப் பணிக்கும் புத்தகங்களும், வழிகாட்டிகளும் இன்று ஏராளமாக உள்ளன. இதன் காரணமாக பலரின் ஹஜ் வீணடிக்கப்படுவதை நம்மால் பார்க்கமுடிகிறது.*

**يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا أَطِيعُـــوا اللَّـــهَ وَأَطِيعُـــوا الرَّسُـــولَ وَلاَ تُبْطِلُـــوا أَعْمَـــالَكُمْ**

*இறைநம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்குக் கட்டுப்படுங்கள்! அவனுடைய தூதருக்கும் கட்டுப்படுங்கள்! உங்களின் செயல் களைப் பாழாக்காதீர்கள்.* ***திருக்குர்ஆன் 47:33***

وَمَا آتَاكُمُ الرَّسُولُ فَخُذُوهُ وَمَا نَهَاكُمْ عَنْهُ فَانْتَهُوا وَاتَّقُوا اللَّهَ إِنَّ اللَّهَ شَدِيدُ الْعِقَابِ.

*தூதர் உங்களுக்கு கொண்டுவந்துள்ளதை எடுத்துக் கொள்ளுங்கள். இன்னும் அவர் தடுத்திருப்பதை விட்டும் விலகிக்கொள்ளுங்கள்! இன்னும், அல்லாஹ்வை அஞ்சுங்கள்! நிச்சயமாக அல்லாஹ் கடுமையாகத் தண்டிப்பவன்.*

***திருக்குர்ஆன் 59:7***

*மேற்கண்ட வசனங்களின்படி உங்களின் அமல்கள் வீணாகாமல் இருக்கவும், அல்லாஹ்வின் விருந்தினர்களாகச் செல்லும் நீங்கள் புனித ஹஜ் கடமையை முறையாக நிறைவேற்றவும் குர்ஆன், ஹதீஸ் அடிப்படையில் ஹஜ் மற்றும் உம்ராவின் வழிகாட்டுதல் அடங்கிய இக்குறிப்பேடு எங்களின் நிறுவனத்தின் சார்பாக வழங்கப்படுகிறது.*

*எனவே, அல்லாஹ்வின் கட்டளைப்படியும், இறைத்தூதர் (ஸல்) அவர்களின் வழிமுறைப்படியும் உங்களின் கடமையான ஹஜ்ஜை நிறைவேற்றிட அன்புடன் அழைக்கிறோம்.*

*நம்முடைய புனித ஹஜ்ஜை அல்லாஹ் ஏற்றுக் கொண்டு மறுமையில் முழுமையான பலனை வழங்குவானாக!*

***சென்னை*** — *அன்புடன்*

***03.04.2010*** — ***அல் ஹுதா ஹஜ் சர்வீஸ் (பி) லிட்.,***

# எங்கள் நிறுவனத்தைப் பற்றி...

*அஸ்ஸலாமு அலைக்கும் (வரஹ்...)*

*அன்பிற்கினிய இஸ்லாமிய சகோதர சகோதரிகள் மற்றும் பெரியோர்களே!*

*ஹஜ் மற்றும் உம்ரா பயணத்திற்கான சேவையை முறையே செய்துதருவதற்கு நம்பிக்கைக்குரிய நிறுவனமாக எங்களின் நிறுவனத்தை ஆக்கித் தந்த அல்லாஹ்வுக்கே புகழனைத்தும் உரித்தாகட்டும்.*

*ஹிஜ்ரி 1421 (கி.பி.2000) ஆம் ஆண்டு இந்திய மற்றும் சவூதி அரபிய அரசுகளின் அங்கீகாரத்துடன் எங்களின் அல் ஹுதா ஹஜ் சர்வீஸ் (பி) லிட்., நிறுவனம் துவக்கப்பட்டது. இறையருளால் ஹஜ் மற்றும் உம்ரா பயணம் மேற்கொள்பவர்களுக்கு சிறந்த முறையில் எங்களின் நிறுவனம் சேவையாற்றி வருகிறது.*

*அல்லாஹ்வின் விருந்தினர்களாக வரும் உங்களுக்கு குர்ஆன் ஹதீஸ் ஒளியில் வழிகாட்டுவதுடன் பாதுகாப்பான, வசதியான அரவணைப்போடு புனித ஹஜ் உம்ரா ஏற்பாட்டை சவூதி அரபியாவில் உள்ள இரண்டு புனிதத் தளங்களிலும் அளிப்பதே எங்கள் குறிக்கோள்.*

*விசா, விமானம், தங்குமிடங்கள், வரலாற்றுச் சிறப்பு மிக்க இடங்களைச் சுற்றிக் காண்பித்தல் முதலிய ஏற்பாடுகளை எங்களின் நிறுவனம் சிறப்பாகச் செய்துவருகிறது.*

*எனவே, எங்களின் அல் ஹுதா ஹஜ் சர்வீஸ் (பி) லிட்., மூலம் உங்களின் ஹஜ் மற்றும் உம்ரா கடமைகளை நிறைவேற்ற அன்புடன் அழைக்கிறோம்.*

*அன்புடன்*

***அல் ஹுதா ஹஜ் சர்வீஸ் (பி) லிட்.,***

# பொருளடக்கம்...

# மக்கா-மதீனா இறைஇல்லங்களின் சிறப்பு

## உலகின் முதல் இறைஇல்லம்

*உலகத்தில் இறைவனை வணங்குவதற்காக முதன்முதலாக எழுப்பபப்பட்ட ஆலயம் கஅபதுல்லாஹ் ஆகும். உலகில் மனிதர்கள் வசிப்பதற்கு ஏற்றதாக ஆதிகாலத்தில் இப்பகுதி இருந்தது என திருக்குர்ஆன் கூறுகிறது. புவியியல் ஆராய்ச்சியும் இவ்வாறு கூறுகிறது.*

إن أولَبَيْـــتٍ وُضِـــعَ لِلنَّـــاسِ لَلَّـــذِيْ بِبَكَّـــةَ مُبَارَكًـــا وَهُـــدًى لِلْعَـــالَمِيْنَ

*அகிலத்தாருக்கு பாக்கியம் மிக்கதாகவும், நேர்வழி காட்டியாகவும், மனிதர்களுக்காக உருவாக்கப்பட்ட முதல் (இறை) இல்லம் பக்காவில் (மக்காவில்) உள்ளதே ஆகும்.*

***திருக்குர்ஆன் 3:96***

## இரண்டு மஸ்ஜிதுகளின் சிறப்பு

*இறைநம்பிக்கையாளர்களால் எழுப்பபப்பட்டுள்ள இறை இல்லங்கள் ஒவ்வொன்றும் புனிதம் வாய்ந்ததே; ஆனால் புனிதத்திலும் புனிதம் மிகுந்தவையாக மக்கா மற்றும் மதீனாவில் அமைந்துள்ள ஹரமைன் என அழைக்கப்படுகிற கஅபத்துல்லாஹ் மற்றும் மஸ்ஜிதுன் னபவீ அமைந்துள்ளன. இது இறைவனால் ஏற்படுத்தப்பட்ட புனிதமாகும். இந்த புனிதத்தை யாராலும் மாற்றியமைக்கவோ குறைக்கவோ முடியாது. இவற்றின் புனிதத்திற்கு உலகிலுள்ள மற்ற எந்த ஆலயமும் ஈடாகாது. இந்தப் புனிதத் தலங்களில் ஒன்றான மக்காவிலுள்ள பைத்துல்லாஹ் எனப்படும் இறைஇல்லம் சென்று சில வணக்க வழிபாடுகள் செய்துவருவதுதான் ஹஜ் மற்றும் உம்ரா என அழைக்கப்படுகிறது. பொருளாதார வசதியைப் பெற்றிருக்கும் ஒவ்வொரு முஸ்லிமும் அங்கு சென்று ஹஜ் வணக்கத்தை நிறைவேற்றுவது கடமையாகும்.*

فِيْهِ آيَاتٌ بَيِّنَاتٌ مَّقَامُ اِبْرَاهِيْمَ وَمَنْ دَخَلَهُ كَانَ آمِنًا وَلِلّٰه عَلَى النَّاسِ حِجُّ الْبَيْتِ مَنِ اسْتَطَاعَ اِلَيْهِ سَبِيْلاً وَمَنْ كَفَرَ فَإِنَّ اللهَ غَنِيٌّ عَـــنِ الْعَـــالَمِيْنَ.

அதில் தெளிவான அத்தாட்சிகளும் இப்ராஹீம் நின்ற இடமும் உள்ளன. மேலும், அதில் நுழைபவர் பாதுகாப்புப் பெற்றவரா கிறார். இன்னும், அதற்குரிய வழியில் செல்லும் திறன் உள்ளவர் அல்லாஹ்வுக்காக அவ்வீட்டை ஹஜ் செய்தல் கடமையாகும். எவரேனும் இதை மறுத்தால் நிச்சயமாக அகிலத்தாரிடமிருந்து அல்லாஹ் (எவ்விதத்) தேவையற்றவன்.

**திருக்குர்ஆன் 3:97**

## அபயமளிக்கும் இடம்

**وَإِذْ قَالَ إِبْرَاهِيمُ رَبِّ اجْعَلْ هَذَا بَلَدًا آمِنًا وَارْزُقْ أَهْلَهُ مِنَ الثَّمَرَاتِ مَنْ آمَنَ مِنْهُمْ بِاللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ**

“என் இரட்சகனே! இந்நகரத்தை அபயம் அளிக்கும் இடமாய் ஆக்கியருள்வாயாக! இதில் வசிப்போரில், அல்லாஹ்வையும், இறுதிநாளையும் நம்புவோருக்குப் பல வகையான கனி வர்க்கங்களை உணவாக அளிப்பாயாக!” என இப்ராஹீம் வேண்டினார்.

**திருக்குர்ஆன் 2:126**

**عَنْ عَبْدِ اللَّهِ بْنِ زَيْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَنَّ إِبْرَاهِيمَ حَرَّمَ مَكَّةَ وَدَعَا لَهَا وَحَرَّمْتُ الْمَدِينَةَ كَمَا حَرَّمَ إِبْرَاهِيمُ مَكَّةَ وَدَعَوْتُ لَهَا فِي مُدِّهَا وَصَاعِهَا مِثْلَ مَا دَعَا إِبْرَاهِيمُ عَلَيْهِ السَّلَام لِمَكَّةَ**

**رواه البخاري رقم الحديث 2129**

“இப்ராஹீம்(அலை) மக்காவைப் புனித நகராக்கினார்கள். அதற்காக பிரார்த்தித்தார்கள். இப்ராஹீம்(அலை) மக்காவைப் புனித நகராக்கியது போல நான் மதீனாவைப் புனித நகராக்கி னேன். இப்ராஹீம்(அலை) மக்காவிற்காக பிரார்த்தித்தது போல நான் மதீனாவிற்காக அதன் ஸாவு, முத்து ஆகியவற்றில் (பரக்கத்துக்காக) பிரார்த்தித்தேன்” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு ஸைத்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ ஹதீஸ் எண்: 2129**

**عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ اللَّهُمَّ اجْعَلْ**

بِالْمَدِينَةِ ضِعْفَيْ مَا جَعَلْتَ بِمَكَّةَ مِنْ الْبَرَكَـــةِ

**رواه البخاري رقـــم الحـــديث 1885**

*"இறைவா! மக்காவில் நீ ஏற்படுத்திய பரக்கத்தைப் போல இரண்டு மடங்கை மதீனாவில் ஏற்படுத்துவாயாக!" என இறைத்தூதர்(ஸல்) பிரார்த்தித்தார்கள்*

***அறிவித்தவர்: அனஸ்(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ ஹதீஸ் எண்: 1885***

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ عَلَى أَنْقَابِ الْمَدِينَةِ مَلَائِكَةٌ لَا يَدْخُلُهَا الطَّاعُونُ وَلَا الدَّجَّالُ

**رواه البخاري رقـــم الحـــديث 1880**

*"மதீனாவின் வாசல்களில் வானவர்கள் இருப்பர்! மதீனா விற்குள் (பிளேக் போன்ற) கொள்ளை நோயும் தஜ்ஜாலும் நுழைய முடியாது!" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ ஹதீஸ் எண்: 1880***

عَـــنْ أَبِـــي هُـــرَيْرَةَ رَضِـــيَ اللَّـــهُ عَنْـــهُ أَنَّ رَسُـــولَ اللَّـــهِ صَـــلَّى اللَّـــهُ عَلَيْـــهِ وَسَـــلَّمَ قَـــالَ إِنَّ الْإِيمَـــانَ لَيَـــأْرِزُ إِلَـــى الْمَدِينَـــةِ كَمَـــا تَـــأْرِزُ الْحَيَّـــةُ إِلَـــى جُحْرِهَـــا

**رواه البخاري رقـــم الحـــديث 1876**

*"பாம்பு தன் புற்றில் அபயம் பெறுவது போல ஈமான் எனும் நம்பிக்கை மதீனாவில் அபயம் பெறும்!' என இறைத்தூதர் (ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ ஹதீஸ் எண்: 1876***

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ حُرِّمَ مَـــا بَيْـــنَ لَابَتَيْ الْمَدِينَةِ عَلَـــى لِسَـــانِي

**رواه البخاري رقـــم الحـــديث 1869**

*"மதீனாவின் இரண்டு மலைகளுக்கு இடைப்பட்ட பகுதி என் நாவினால் புனிதமானதாய் ஆக்கப்பட்டுவிட்டது!' என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்...*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ ஹதீஸ் எண்: 1869***

**عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ الْمَدِينَةُ حَرَمٌ مِنْ كَذَا إِلَى كَذَا لَا يُقْطَعُ شَجَرُهَا وَلَا يُحْدَثُ فِيهَا حَدَثٌ مَنْ أَحْدَثَ حَدَثًا فَعَلَيْهِ لَعْنَةُ اللَّهِ وَالْمَلَائِكَةِ وَالنَّاسِ أَجْمَعِينَ**

**رواه البخاري رقم الحديث 1867**

*''மதீனா நகர் இங்கிருந்து இதுவரை புனிதமானதாகும்! இங்குள்ள மரங்கள் வெட்டப்படக் கூடாது; இங்கே (மார்க்கத்தின் பெயரால்) புதியது எதுவும் உருவாக்கப்படக் கூடாது! (மார்க்கத்தின் பெயரால்) புதிய (செயல் அல்லது கொள்கை) ஒன்றை ஏற்படுத்துகிறவர் மீது அல்லாஹ்வின்.. வானவர்கள் மற்றும் மக்கள் அனைவரின் சாபமும் ஏற்படும்!" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அனஸ்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ ஹதீஸ் எண்: 1867***



## இரண்டு இறைஇல்லங்களில் தொழுவதன் சிறப்பு

**عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ صَلَاةٌ فِي مَسْجِدِي هَذَا خَيْرٌ مِنْ أَلْفِ صَلَاةٍ فِيمَا سِوَاهُ إِلَّا الْمَسْجِدَ الْحَرَامَ.**

**رواه البخاري رقم الحديث 1190**

*"ஏனைய மஸ்ஜிதுகளில் தொழுவதை விட என்னுடைய இந்த மஸ்ஜிதில் தொழுவது ஆயிரம் தொழுகையை விடச் சிறந்த தாகும். மஸ்ஜிதுல் ஹராமைத் தவிர" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ ஹதீஸ் எண்: 1190***

*மேற்கண்ட ஹதீஸின்படி மஸ்ஜிதுல் ஹராமில் தொழுவது உலகின் மற்ற மஸ்ஜிதுகளில் தொழுவதைவிட அதிகப்படியான*

நன்மையைத் தரும் என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும். இதற்கான நன்மையை இவ்வளவுதான் என யாரும் கணக்கிட முடியாது. மஸ்ஜிதுல் ஹராமில் ஒரு நேரத் தொழுகை ஒரு இலட்சம் தொழுகைக்கு நிகரானது என்ற கருத்தில் இடம் பெற்றுள்ள ஹதீஸ்கள் குறையுடையவையாக உள்ளன. எனவே அங்கு தொழுவதற்கு வழங்கப்படும் அதிகப் படியான நன்மையை அல்லாஹ் மட்டுமே அறிந்தவன். இதை எண்ணிக்கையில் நம்மால் வரையறுத்துக் கூறுமுடியாது.

இக்கருத்தை 3:96 வசனமும் உறுதிப்படுத்துகிறது.

## ஹரமின் புனிதத்தைப் பாதுகாத்தல்

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ لَمَّا فَتَحَ اللَّهُ عَلَى رَسُولِهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مَكَّةَ قَامَ فِي النَّاسِ فَحَمِدَ اللَّهَ وَأَثْنَى عَلَيْهِ ثُمَّ قَالَ إِنَّ اللَّهَ حَبَسَ عَنْ مَكَّةَ الْفِيلَ وَسَلَّطَ عَلَيْهَا رَسُولَهُ وَالْمُؤْمِنِينَ فَإِنَّهَا لَا تَحِلُّ لِأَحَدٍ كَانَ قَبْلِي وَإِنَّهَا أُحِلَّتْ لِي سَاعَةً مِنْ نَهَارٍ وَإِنَّهَا لَا تَحِلُّ لِأَحَدٍ بَعْدِي فَلَا يُنَفَّرُ صَيْدُهَا وَلَا يُخْتَلَى شَوْكُهَا وَلَا تَحِلُّ سَاقِطَتُهَا إِلَّا لِمُنْشِدٍ وَمَنْ قُتِلَ لَهُ قَتِيلٌ فَهُوَ بِخَيْرِ النَّظَرَيْنِ إِمَّا أَنْ يُفْدَى وَإِمَّا أَنْ يُقِيدَ فَقَالَ الْعَبَّاسُ إِلَّا الْإِذْخِرَ فَإِنَّا نَجْعَلُهُ لِقُبُورِنَا وَبُيُوتِنَا فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ إِلَّا الْإِذْخِرَ فَقَامَ أَبُو شَاهٍ رَجُلٌ مِنْ أَهْلِ الْيَمَنِ فَقَالَ اكْتُبُوا لِي يَا رَسُولَ اللَّهِ فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ اكْتُبُوا لِأَبِي شَاهٍ.

**رواه البخاري رقم الحديث2434**

உயர்வுமிக்க அல்லாஹ் தன் தூதருக்கு மக்கா நகரின் வெற்றியை அளித்தபோது அவர்கள் மக்களுக்கு மத்தியில் நின்று அல்லாஹ்வைப் புகழ்ந்தார்கள்.

“உயர்வு மிக்க அல்லாஹ் மக்காவை விட்டு யானைகளைத் (யானைப் படையை) தடுத்துவிட்டான். அதன் மீது (தற்போது) தன் தூதருக்கும் இறைநம்பிக்கையாளர்களுக்கும் அதிகாரம் வழங்கியுள்ளான். இந்த மக்கா மாநகரில் எனக்கு முன்பு

எவருக்கும் போரிடுவதற்கு அனுமதிக்கப்பட்டவில்லை. எனக்கோ பகலின் சிறிது நேரத்தில் மட்டுமே அனுமதிக்கப் பட்டது. எனக்குப் பின்பும் அது எவருக்கும் அனுமதி அளிக்கப்படவில்லை.

வேட்டைப் பிராணிகள் இங்கு விரட்டப்படக் கூடாது. இதன் முட்கள் பிடுங்கப்படக் கூடாது. இங்கு கீழே விழுந்து கிடக்கும் பொருளை அறிவிப்புச் செய்பவர் தவிர வேறெவரும் எடுப்பது அனுமதிக்கப்பட்டதல்ல. கொல்லப்பட்டவரின் உறவினர் அதற்கான நஷ்ட ஈட்டுத் தொகை பெறலாம்; அல்லது அதற் காகப் பழிவாங்கிக் கொள்ளலாம் என வழங்கப்பட்டிருக்கும் உரிமைகளில் ஒன்றை அவர் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

"இத்கிர்' புல்லைத் தவிரவா? ஏனெனில், அதை நாங்கள் எங்கள் கப்ருகளுக்கும் வீடுகளுக்கும் பயன்படுத்துகிறோம்'' என அப்பாஸ்(ரலி) கேட்டார்கள்.

''இத்கிர்' புல்லைத் தவிரத்தான்'' என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

அப்போது யமன்வாசிகளில் ஒருவரான அபூ ஷாஹ்(ரலி) என்பவர் எழுந்து, 'இறைத்தூதர் அவர்களே! (இதை) எனக்கு எழுதிக் கொடுங்கள்" எனக் கேட்டார்.

'அபூ ஷாஹுக்கு எழுதிக் கொடுங்கள்'' என இறைத்தூதர் (ஸல்) உத்தரவிட்டார்கள்.

**அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 2434**

## நன்மையை நாடிப் பயணம் செல்லுதல்

**عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ لَا تُشَدُّ الرِّحَالُ إِلَّا إِلَى ثَلَاثَةِ مَسَاجِدَ الْمَسْجِدِ الْحَرَامِ وَمَسْجِدِ الرَّسُولِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَمَسْجِدِ الْأَقْصَى.**

**رواه البخاري رقم الحديث 1189**

''மஸ்ஜிதுல் ஹராம், மஸ்ஜிதுன் னபவீ, மஸ்ஜிதுல் அக்ஸா ஆகிய மூன்று பள்ளிகளைத் தவிர (நன்மையை நாடி மற்ற

பள்ளிகளுக்கு) பயணம் செல்லுதல் கூடாது'' என இறைத் தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ ஹதீஸ் எண்: 1189**

மேற்கண்ட ஹதீஸின்படி **மஸ்ஜிதுல் ஹராம், மஸ்ஜிதுன் னபவீ** மற்றும் **மஸ்ஜிதுல் அக்ஸா** தவிர உலகின் வேறு எந்த மஸ்ஜிதுக்கும் நன்மையை நாடி பயணம் செல்லுதல் கூடாது என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும்.

# ஹஜ் உம்ரா

## ஹஜ் மற்றும் உம்ரா என்றால் என்ன ?

*மக்கா மாநகரில் அமைந்திருக்கும் மஸ்ஜிதுல் ஹராம் சென்று அதை தவாஃப் செய்து ஸஃபா மற்றும் மர்வாவுக்கு இடையில் ஓடி அதன் பின்னர் தலையை மழித்துக் கொள்வது உம்ரா எனப்படும்.*

*துல் ஹஜ் மாதத்தின் 8 ஆம் நாளன்று மினாவில் இரவு தங்கி, அதன்பின்னர் 9 ஆம் நாளன்று அரஃபா சென்று சூரியன் மறையும் வரை அங்கு இருந்துவிட்டு, அதே நாள் இரவு முஸ்தலிஃபாவில் தங்கி, மறு நாள் மினாவில் ஜம்ராவை கல்லெறிய வேண்டும். அதன்பின்னர் குர்பான் கொடுத்து, தலையை மழிக்க வேண்டும். பின்னர் கஅபாவை தவாஃப் செய்துவிட்டு, மினா திரும்பி அங்கு இரவு தங்குவதற்கு ஹஜ் எனப்படும்.*

## ஹஜ் மற்றும் உம்ராவின் சிறப்புகள்

**عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْـهُ أَنَّ رَسُـولَ اللَّـهِ صَـلَّى اللَّـهُ عَلَيْـهِ وَسَلَّمَ قَالَ الْعُمْرَةُ إِلَى الْعُمْرَةِ كَفَّـارَةٌ لِمَـا بَيْنَهُمَـا وَالْحَـجُّ الْمَبْـرُورُ لَيْسَ لَهُ جَـزَاءٌ إِلاَّ الْجَنَّـةُ.**

**رواه البخاري رقم الحديث1773**

*"ஓர் உம்ரா செய்வது மறு உம்ரா வரையிலுள்ள பாவங்களின் பரிகாரமாகும். ஏற்றுக் கொள்ளப்பட்ட ஹஜ்ஜுக்கு, சுவர்க் கத்தைத் தவிர வேறு கூலியில்லை" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.* ***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1773***

**...عن ابن عباس رضي الله عنهما قال...قال رسول الله صلى الله عليه وسـلم**

**فَإِنَّ عُمْرَةً فِي رَمَضَانَ تَقْضِي حَجَّـةً أَوْ حَجَّـةً مَعِـي.**

**رواه البخاري رقـم الحـديث1863**

*“ரமளான் மாதத்தில் உம்ரா செய்வது ஹஜ்ஜுக்கு நிகராகும்; அல்லது என்னுடன் ஹஜ் செய்தது போன்றதாகும்’’ என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1863***

**عَنْ أَبِي هُرَيْرَةَ أَنَّ رَسُولَ اللَّـهِ صَـلَّى اللَّـهُ عَلَيْـهِ وَسَـلَّمَ سُـئِلَ أَيُّ الْعَمَلِ أَفْضَلُ فَقَالَ إِيمَانٌ بِاللَّهِ وَرَسُولِه قِيـلَ ثُـمَّ مَـاذَا قَـالَ الْجِهَـادُ فِـي سَبِيلِ اللَّهِ قِيلَ ثُمَّ مَـاذَا قَـالَ حَـجٌّ مَبْـرُورٌ.**

**رواه البخاري رقم الحديث25**

*‘‘மிகச்சிறந்த செயல் எது?’’ என இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது.*

*“அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதர் மீதும் நம்பிக்கை கொள்வது” எனக் கூறினார்கள்.*

*“பின்னர் எது?” எனக் கேட்கப்பட்டது.*

*“ஜிஹாத் செய்தல்” எனக் கூறினார்கள்.*

*“பின்னர் எது” எனக் கேட்கப்பட்டது.*

*‘‘(இறைவனால்) ஏற்றுக்கொள்ளப்படக்கூடிய ஹஜ்’’ எனக் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 25***

**عن أبي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ سَمِعْتُ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَـلَّمَ يَقُـولُ مَنْ حَجَّ لِلَّهِ فَلَمْ يَرْفُثْ وَلَمْ يَفْسُقْ رَجَعَ كَيَوْمِ وَلَدَتْهُ أُمُّـهُ**

**رواه البخاري رقم الحديث1521**

*‘‘பாலுறவு மற்றும் பாவமான செயல்களில் ஈடுபடாமல் ஒருவர் அல்லாஹ்வுக்காக ஹஜ் செய்தால், அவரின் தாய் அவரைப் பெற்றெடுத்த நாளில் இருந்ததைப்போல திரும்புவார்” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1521, 1819***

**عن عمرو بن العاص رضي الله عنه قال:أَنَّ الإِسْلاَمَ يَهْدِمُ مَا كَـــانَ قَبْلَـــهُ وَأَنَّ الْهِجْرَةَ تَهْدِمُ مَا كَانَ قَبْلَهَا وَأَنَّ الْحَجَّ يَهْدِمُ مَـــا كَـــانَ قَبْلَـــهُ.**

**رواه مسلم رقم الحديث173**

*"நிச்சயமாக இஸ்லாம் (அதை ஏற்பவரின் அதற்கு) முந்தைய பாவங் களை அழித்துவிடும். நிச்சயமாக ஹிஜ்ரத் அதற்கு முந்தைய பாவங்களை அழித்துவிடும். நிச்சயமாக ஹஜ் அதற்கு முந்தைய பாவங்களை அழித்துவிடும்'' என இறைத்தூதர் (ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அம்ர் இப்னு அல் ஆஸ்(ரலி)***
***நூல்: முஸ்லிம், ஹதீஸ் எண்: 173***

## தமத்துஃ ஹஜ்

*'உம்ரா'வைத் தொடர்ந்து செய்யும் 'ஹஜ்' 'தமத்துஃ ஹஜ்' எனப்படும்.*

*உம்ராவுக்கு மட்டும் இஹ்ராம் கட்டி உம்ராவை நிறைவேற்றிய பிறகு மக்காவில் தங்கியிருந்து ஹஜ்ஜுக்காக துல்ஹஜ் 8ஆம் நாளன்று இஹ்ராம் கட்டுவது தமத்துஃ ஹஜ் ஆகும். இவ்வாறு இஹ்ராம் கட்டியவர் 10ஆம் நாளன்று குர்பான் கொடுப்பது அவசியமாகும். இவ்வாறு செய்யக் கூடியவர்கள் உம்ராவுக்கு இஹ்ராம் கட்டும்போது ''லப்பைக்க உம்ரத்தன்'' என்றும் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டும்போது "லப்பைக்க ஹஜ்ஜன்" என்றும் கூறி இஹ்ராம் கட்ட வேண்டும்.*

**عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّهَا قَالَتْ خَرَجْنَـا مَـعَ رَسُـولِ اللَّـهِ صَـلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ عَامَ حَجَّةِ الْوَدَاعِ فَمِنَّا مَنْ أَهَلَّ بِعُمْـرَةٍ وَمِنَّـا مَـنْ أَهَـلَّ بِحَجَّةٍ وَعُمْرَةٍ وَمِنَّا مَنْ أَهَلَّ بِالْحَجِّ وَأَهَلَّ رَسُـولُ اللَّـهِ صَـلَّى اللَّـهُ عَلَيْـهِ وَسَلَّمَ بِالْحَجِّ فَأَمَّا مَنْ أَهَلَّ بِالْحَجِّ أَوْ جَمَـعَ الْحَـجَّ وَالْعُمْـرَةَ لَـمْ يَحِلُّـوا حَتَّى كَانَ يَـوْمُ النَّحْـرِ.**

**رواه البخاري رقم الحـديث1562 ومسلم رقم الحـديث2113**

*இறைத்தூதர்(ஸல்) அவர்களின் விடைபெறும் ஹஜ்ஜின்போது நாங்களும் அவர்களுடன் சென்றிருந்தோம். சிலர் உம்ராவிற்கும்,*

இன்னும் சிலர் ஹஜ்ஜுக்கும் உம்ராவிற்கும் சேர்த்து, இன்னும் சிலர் ஹஜ்ஜுக்காக மட்டும் இஹ்ராம் அணிந்திருந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிந்திருந் தார்கள். ஹஜ்ஜுக்காகவோ அல்லது ஹஜ்ஜுக்கும் உம்ராவிற் காகவும் சேர்த்தோ இஹ்ராம் அணிந்தவர்கள் பிராணியைக் குர்பானி கொடுக்கும் (பத்தாம்) நாள் வரும் வரை இஹ்ராமி லிருந்து விடுபடவில்லை.

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1562, முஸ்லிம்: 2113***

## யார் மீது ஹஜ் கடமை?

فِيْهِ آيَاتٌ بَيِّنَاتٌ مَّقَامُ اِبْرَاهِيْمَ وَمَنْ دَخَلَهُ كَانَ آمِنًا وَلِلّٰهِ عَلَى النَّاسِ حِجُّ الْبَيْتِ مَنِ اسْتَطَاعَ اِلَيْهِ سَبِيْلاً وَمَنْ كَفَرَ فَإِنَّ اللهَ غَنِيٌّ عَــنِ الْعَــالَمِيْنَ.

அதில் தெளிவான அத்தாட்சிகளும் இப்ராஹீம் நின்ற இடமும் உள்ளன. மேலும், அதில் நுழைபவர் பாதுகாப்புப் பெற்றவரா கிறார். இன்னும், அங்கு செல்லும் ஆற்றல் பெற்றவர் மீது அல் லாஹ்வுக்காக அவ்வீடு சென்று ஹஜ் செய்வது கடமையாகும்.

எவரேனும் இதை மறுத்தால் நிச்சயமாக ஏக இறைவன் அகிலகத்தாரிடமிருந்து தேவையற்றவனாய் இருக்கிறான்.

***திருக்குர்ஆன் 3:97***

மேற்கண்ட இறைவசனத்தில் **ஸபீல்** யாருக்கு இருக்கிறதோ அவர் ஹஜ்ஜை நிறைவேற்றச் செல்வது கடமையாகும். எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வசனத்தில் உள்ள **ஸபீல்** என்னும் சொல்லுக்கு வழிச்செலவு மற்றும் வாகனம் என்று பொருள்.

عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ كَــانَ الْفَضْــلُ رَدِيــفَ النَّبِــيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَجَاءَتْ امْرَأَةٌ مِنْ خَثْعَــمَ فَجَعَــلَ الْفَضْــلُ يَنْظُــرُ إِلَيْهَا وَتَنْظُرُ إِلَيْهِ فَجَعَلَ النَّبِيُّ صَــلَّى اللَّــهُ عَلَيْــهِ وَسَــلَّمَ يَصْــرِفُ وَجْــهَ الْفَضْلِ إِلَى الشِّقِّ الْآخَرِ فَقَالَتْ إِنَّ فَرِيضَةَ اللَّــهِ أَدْرَكَــتْ أَبِــي شَــيْخًا كَبِيرًا لَا يَثْبُتُ عَلَى الرَّاحِلَةِ أَفَأَحُجُّ عَنْهُ قَالَ نَعَمْ وَذَلِــكَ فِــي حَجَّــةِ الْــوَدَاعِ

رواه البخاري رقــم الحــديث 1513

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குப் பின்னால் (ஒட்டகத்தில்) ஃபழ்ல்(ரலி) அமர்ந்திருந்தபோது 'கஸ்அம்' கோத்திரத்தை சார்ந்த ஒரு பெண் வந்தார். உடனே ஃபழ்ல் அப்பெண்ணைப் பார்க்க அப்பெண்ணும் இவரைப் பார்த்தார். ஃபழ்லின் முகத்தை இறைத்தூதர்(ஸல்) வேறு திசையில் திருப்பி விட்டார்கள். பின்னர்,

'(இறைத்தூதர் அவர்களே!) நிச்சயமாக அல்லாஹ் தன் அடியார்களின் மீது ஹஜ்ஜைக் கடமையாக்கியுள்ளான். ஆனால் வயது முதிர்ந்த என் தந்தையால் வாகனத்தில் அமர முடியாது. எனவே நான் அவருக்குப் பகரமாக ஹஜ் செய்யலாமா" என அப்பெண் கேட்டார்.

'ஆம்!" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

இது விடைபெறும் ஹஜ்ஜில் நிகழ்ந்தது.

**அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ ஹதீஸ் எண்: 1513**

இந்த ஹதீஸின் அடிப்படையில் ஹஜ் கடமையை நிறைவேற்றுவதற்கு பொருள் மற்றும் அங்கு செல்வதற்கான வாகன வசதியைத்தான் குறிக்கிறது. உடல் ஆரோக்கியமும் இருந்தால் தான் ஹஜ் கடமையாகும் என்ற கருத்து அல்ல. ஏனெனில் உடல் ஆரோக்கியம் குன்றிய நிலையில் ஒருவருக்கு ஹஜ் செய்யும் எண்ணம் இருந்தால் அவர் தனக்குப் பதிலாக பிறரை அனுப்பியாவது ஹஜ் கடமையை நிறைவு செய்யலாம்.

## பெண்களின் ஜிஹாத் - ஹஜ்

**عَنْ عَائِشَةَ أُمِّ الْمُؤْمِنِينَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّهَا قَالَتْ: يَا رَسُولَ اللَّهِ نَرَى الْجِهَادَ أَفْضَلَ الْعَمَلِ أَفَلَا نُجَاهِدُ قَالَ لاَ لَكِنَّ أَفْضَلَ الْجِهَادِ حَجٌّ مَبْرُورٌ**

**رواه البخاري رقم الحديث1520**

"இறைத்தூதர் அவர்களே! ஜிஹாத் செய்வதை நாங்கள் சிறந்த செயலாகக் கருதுகிறோம்; எனவே நாங்களும் ஜிஹாத் செய்யலாமா?" என கேட்டேன்.

"கூடாது. எனினும் (பெண்களுக்கு) சிறந்த ஜிஹாத் ஏற்றுக் கொள் ளப்பட்ட ஹஜ் ஆகும்'' என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: ஆயிஷா(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1520**

## பெண்கள் தக்க துணை (மஹ்ரம்) இன்றி ஹஜ்ஜுக்கு செல்லலாமா ?

عَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ لَا تُسَافِرْ الْمَرْأَةُ ثَلَاثَةَ أَيَّامٍ إِلَّا مَعَ ذِي مَحْرَمٍ.

''ஒரு பெண் தனக்கு மணபந்தம் விலக்கப்பட்ட ஓர் ஆண் உறவினர் இல்லாமல் மூன்று நாட்கள்கூட பயணம் செல்லக் கூடாது" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: இப்னு உமர்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1086**

عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ قَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لَا تُسَافِرْ الْمَرْأَةُ إِلَّا مَعَ ذِي مَحْرَمٍ وَلَا يَدْخُلُ عَلَيْهَا رَجُلٌ إِلَّا وَمَعَهَا مَحْرَمٌ فَقَالَ رَجُلٌ يَا رَسُولَ اللَّهِ إِنِّي أُرِيدُ أَنْ أَخْرُجَ فِي جَيْشِ كَذَا وَكَذَا وَامْرَأَتِي تُرِيدُ الْحَجَّ فَقَالَ اخْرُجْ مَعَهَا

رواه البخاري رقم الحديث 1862

''ஒரு பெண் தனக்கு மணபந்தம் விலக்கப்பட்ட ஓர் ஆண் துணை இல்லாமல் பயணம் செல்லக் கூடாது. மண பந்தம் விலக்கப்பட்ட ஓர் ஆணுடன் பெண் இருக்கும் நிலையில்தான் அந்நிய ஆண் அவளைச் சந்திக்க வேண்டும்' என இறைத்தூதர் (ஸல்) கூறினார்கள்.

''இறைத்தூதர் அவர்களே! நான் இன்னின்ன படையுடன் புறப்பட இருக்கிறேன்; என் மனைவி ஹஜ் செய்ய எண்ணுகிறார்?' என ஒருவர் கேட்டார்.

"மனைவியுடன் நீரும் புறப்படுவீராக! என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1862**

பெண்கள் தக்க துணையின்றி தொலை தூர பயணத்தை மேற் கொள்வதை இறைத்தூதர்(ஸல்) தடுத்துள்ளார்கள். ஆனால், ஹஜ் என்ற புனிதப் பயணத்தை மேற்கொள்ள ஒரு பெண்

விரும்பினால் தனக்குத் தக்கபாதுகாப்பை உறுதி செய்துகொண்டு மஹ்ரம் இன்றி பயணம் மேற்கொள்வதை இஸ்லாம் தடுக்கவில்லை. அதைத்தான் பின்வரும் ஹதீஸ் உணர்த்துகிறது.

عَنْ عَدِيِّ بْنِ حَاتِمٍ رضي الله عنه قـــال:...لَتَـــرَيَنَّ الظَّعِينَـــةَ تَرْتَحِـــلُ مِنْ الْحِيرَةِ حَتَّى تَطُـــوفَ بِالْكَعْبَـــةِ لاَ تَخَـــافُ أَحَـــدًا إِلاَّ اللَّـــه...

رواه البخاري رقم الحديث3595

''ஹியரா என்னும் இடத்திலிருந்து ஒரு பெண்மணி தன் துணையின்றி அல்லாஹ்வைத் தவிர யாருக்கும் அஞ்சாத வளாக கஅபாவை தவாஃப் செய்வதை விரைவில் காண்பீர்'' என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: அதீ இப்னு ஹாதிம்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 3595**

## மாதவிடாய்ப் பெண்களின் ஹஜ்

عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَـــا زَوْجِ النَّبِـــيِّ صَـــلَّى اللَّـــهُ عَلَيْـــهِ وَسَـــلَّمَ قَالَتْ:...فَقَدِمْتُ مَكَّةَ وَأَنَا حَائِضٌ وَلَمْ أَطُـــفْ بِالْبَيْـــتِ وَلَـــا بَيْـــنَ الصَّـــفَا وَالْمَرْوَةِ فَشَكَوْتُ ذَلِكَ إِلَى النَّبِيِّ صَـــلَّى اللَّـــهُ عَلَيْـــهِ وَسَـــلَّمَ فَقَـــالَ انْقُضِي رَأْسَكِ وَامْتَشِطِي وَأَهِلِّي بِـــالْحَجِّ وَدَعِـــي الْعُمْـــرَةَ فَفَعَلْـــتُ فَلَمَّـــا قَضَيْنَا الْحَجَّ أَرْسَلَنِي النَّبِـــيُّ صَـــلَّى اللَّـــهُ عَلَيْـــهِ وَسَـــلَّمَ مَـــعَ عَبْـــدِ الرَّحْمَنِ بْنِ أَبِي بَكْرٍ إِلَى التَّنْعِيمِ فَـــاعْتَمَرْتُ فَقَـــالَ هَـــذِهِ مَكَـــانَ عُمْرَتِـــكِ.

رواه البخاري رقم الحديث1556

நான் மாதவிடாய்க் காரியாக இருந்த நிலையில் மக்கா வந்தடைந்தேன். எனவே நான் தவாஃபு செய்யவுமில்லை. ஸஃபா மர்வாவுக் கிடையே ஓடவுமில்லை. இது குறித்து இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் முறையிட்டேன்.

''உன் தலையை அவிழ்த்து சீவிக் கொண்டு ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டு! உம்ராவை விட்டுவிடு'' என இறைத்தூதர் (ஸல்) கூறினார்கள்.

நான் அவ்வாறே செய்தேன். நாங்கள் ஹஜ்ஜை முடித்ததும் என் சகோதரர் அப்துர் ரஹ்மானுடன் தன்யீம் என்னும் இடத்திற்கு என்னை அனுப்பினார்கள். அங்கே உம்ராவுக்காக இஹ்ராம் கட்டி உம்ராவை முடித்தேன். இது அந்த உம்ராவுக்குப் பகர மாகும்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: ஆயிஷா (ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1556**

**عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قالت:...فَاقْضِي مَا يَقْضِي الْحَاجُّ غَيْرَ أَنْ لَا تَطُوفِي بِالْبَيْتِ قَالَتْ وَضَحَّى رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ عَنْ نِسَائِهِ بِالْبَقَرِ.**

**رواه البخاري رقم الحديث294**

"ஹாஜிகள் செய்யும் அனைத்தையும் செய்துகொள்! தூய்மை யாகும் வரை கஅபாவில் தவாஃப் செய்யாதே" என இறைத் தூதர்(ஸல்) கூறினார்கள்.

பின்னர், தம் மனைவிமார்களுக்காக இறைத்தூதர்(ஸல்) மாட்டை அறுத்துப் பலியிட்டார்கள்.

**அறிவித்தவர்: ஆயிஷா (ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 294**



**عن حابر بن عبدالله رضي الله عنه قال:...وَحَاضَتْ عَائِشَةُ رَضِيَ اللَّهُ عَنْهَا فَنَسَكَتْ الْمَنَاسِكَ كُلَّهَا غَيْرَ أَنَّهَا لَمْ تَطُفْ بِالْبَيْتِ فَلَمَّا طَهُرَتْ طَافَتْ بِالْبَيْتِ.**

**رواه البخاري رقم الحديث1651**

...ஹஜ்ஜின்போது ஆயிஷா(ரலி) மாதவிலக்கானார்கள். இறை இல்லத்தை தவாஃப் செய்தல் தவிர்த்து ஹஜ்ஜின் கிரியைகள் அனைத்தையும் செய்தார்கள். அவர்கள் தூய்மை அடைந்ததும் கஅபாவை தவாஃப் செய்தார்கள்.

**அறிவித்தவர்: ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1651**

மேற்கண்ட நபிமொழியிலிருந்து மாதவிலக்கான பெண்களும் ஹஜ் செய்யலாம். ஆனால் குறிப்பிட்ட ஒரு சில கிரியைகள் செய்வதை விட்டும் விலகி இருந்து மாதவிலக்கிலிருந்து தூய்மையானவுடன் அவற்றை நிறைவேற்ற வேண்டும் என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும்.

## பிறருக்காக ஹஜ் செய்தல்

عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّـهُ عَنْهُمَا قَالَ: جَاءَتْ امْرَأَةٌ مِنْ خَثْعَمَ عَامَ حَجَّةِ الْوَدَاعِ قَالَتْ يَا رَسُولَ اللَّهِ إِنَّ فَرِيضَةَ اللَّـهِ عَلَى عِبَادِهِ فِي الْحَجِّ أَدْرَكَتْ أَبِي شَيْخًا كَبِيرًا لَا يَسْتَطِيعُ أَنْ يَسْتَوِيَ عَلَى الرَّاحِلَةِ فَهَلْ يَقْضِي عَنْهُ أَنْ أَحُجَّ عَنْهُ قَالَ نَعَمْ.

**رواه البخاري رقم الحديث1854**

*கடைசி ஹஜ்ஜின்போது கஸ்அம் கோத்திரத்தைச் சார்ந்த ஒரு பெண்மணி இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து,*

*“இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் தன் அடியான் மீது கடமையாக்கிய ஹஜ் என் தந்தைக்கு விதியாகிவிட்டது. அவர் முதிர்ந்த வயதுடைய வராகவும் வாகனத்தில் அமர முடியாதவராகவும் இருக்கிறார். நான் அவர் சார்பாக ஹஜ் செய்தால் அது நிறைவேறுமா?” எனக் கேட்டார்.*

*“ஆம்” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1854***

عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ امْرَأَةً مِنْ جُهَيْنَةَ جَاءَتْ إِلَى النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَتْ إِنَّ أُمِّي نَذَرَتْ أَنْ تَحُجَّ فَلَمْ تَحُجَّ حَتَّى مَاتَتْ أَفَأَحُجُّ عَنْهَا قَالَ نَعَمْ حُجِّي عَنْهَا أَرَأَيْتِ لَوْ كَانَ عَلَى أُمِّكِ دَيْنٌ أَكُنْتِ قَاضِيَةً اقْضُوا اللَّـهَ فَاللَّـهُ أَحَقُّ بِالْوَفَاءِ.

**رواه البخاري رقم الحديث1852**

ஜுஹைனா கோத்திரத்தைச் சார்ந்த ஒரு பெண்மணி இறைத் தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து, 'என் தாய் ஹஜ் செய்வதாக நேர்ச்சை செய்து அதை நிறைவேற்றாமல் இறந்துவிட்டார். அவருக்குப் பதிலாக நான் ஹஜ் செய்யலாமா?' என்று கேட்டதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'ஆம்! அவருக்குப் பதிலாக நீ ஹஜ் செய், உன் தாய்க்குக் கடன் இருந்தால் நீ தானே அதை நிறைவேற்றுவாய். எனவே, அல்லாஹ்வின் கடனை நிறை வேற்றுங்கள், கடன்கள் நிறைவேற்றப்படு வதற்கு அல்லாஹ் அதிகம் உரிமை படைத்தவன்" என்றார்கள்.

**அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1852**

மேற்கண்ட நபிமொழிகளிலிருந்து ஒருவரின் நேர்ச்சையை நிறைவேற்றும் முகமாக மற்றவர் ஹஜ் செய்யலாம் என்பதை அறியலாம்.

## சிறுவர்களின் ஹஜ்

**عن ابن عبـــاس رضـــي الله عنـــهما**

**عَنْ النَّبِيِّ صَلَّى اللَّــهُ عَلَيْــهِ وَسَــلَّمَ لَقِــيَ رَكْبًــا بِالرَّوْحَــاءِ فَقَــالَ مَــنْ الْقَوْمُ قَالُوا الْمُسْلِمُونَ فَقَالُوا مَنْ أَنْــتَ قَــالَ رَسُــولُ اللَّــهِ فَرَفَعَــتْ إِلَيْــهِ امْرَأَةٌ صَبِيًّا فَقَالَتْ أَلِهَذَا حَجٌّ قَالَ نَعَــمْ وَلَــكِ أَجْــرٌ.**

**رواه مسلم رقم الحديث 2277**

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஒரு பெண் சிறுகுழந்தையைத் தூக்கிக் காண்பித்து இவனுக்கு ஹஜ் உண்டா" எனக் கேட்டார்.

"ஆம்; கூலி உனக்கு உண்டு" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)**
**நூல்: முஸ்லிம், ஹதீஸ் எண்: 2277**

சிறு குழந்தைகளைக் காரணம் காட்டி ஹஜ் கடமையைத் தள்ளிப்போடாமல். அவர்களையும் நாம் ஹஜ்ஜுக்கு அழைத்துச் செல்லலாம்.

# ஹஜ் உம்ரா செயல்முறை

## இஹ்ராம் என்றால் என்ன ?

“இஹ்ராம் என்பதற்குத் தடுத்தல், விலக்குதல்” என்று பொருள். அதாவது இதற்கு முன்னர் அனுமதிக்கப்பட்டிருந்த சில காரியங்கள் இதன்பிறகு தடுக்கப்படுவதால் இதற்கு இஹ்ராம் எனக் கூறப்படுகிறது.

## இஹ்ராம் நிலையில் செய்யக் கூடாதவை

1. நறுமணம் பூசுதல்
2. நகம், முடி களைதல்
3. வேட்டையாடுதல்
4. தீயபேச்சுக்கள் பேசுதல்
5. திருமணம் தொடர்பாக பேசுதல்
6. ஆண்கள் காலுறைகள் அணிதல்
7. பெண்கள் முகத்தை மறைத்தல் மற்றும் கையுறை அணிதல்
8. உடலுறவில் ஈடுபடுதல்
9. ஆண்கள் தலையை மறைத்தல்
10. ஆண்கள் தைத்த ஆடையணிதல்



## உம்ராவின் சட்டங்கள்

கஅபாவை தவாஃப் செய்த பின்னர் ஜம்ஜம் தண்ணீரை அருந்துவதும், இரண்டு ரக்அத்துக்கள் தொழுவதும், ஸஃபா மற்றும் மர்வாவுக்கிடையே ஸயீ செய்துவதும் அதன் பின்னர் மொட்டையடித்துக் கொள்ளுதல் அல்லது முடியை பரவலாகக் குறைத்துக் கொள்வதும் உம்ரா எனப்படும்.

1. இஹ்ராம் ஆடை அணிதல்.
2. **“லப்பைக்க உம்ரத்தன்”** என வாயால் மொழிதல்.
3. தல்பியா கூறுதல்
4. கஅபாவை வலம் வருதல்.
5. மகாமு இப்ராஹீமில் இரண்டு ரக்அத்கள் தொழுதல்.

6. ஸஃபா மர்வாவுக்கிடையே ஸயீ செய்தல்.
7. ஆண்கள் மொட்டையடித்தல் அல்லது முடியைப் பரவலாகக் குறைத்துக் கொள்ளுதல்.
8. பெண்கள் தலைமுடியை சிறிது குறைத்துக் கொள்ளுதல்.

## தவாஃப்

1. தவாஃபை அஸ்வத் கல்லின் மூலையிலிருந்து “பிஸ்மில்லாஹி அல்லாஹு அக்பர்” எனக் கூறி தொடங்க வேண்டும்.
2. அஸ்வத் கல்லின் மூலையில் வரும்போது ஒவ்வொரு முறையும் இயன்றால் நேரடியாக முத்தமிடவேண்டும். அல்லது கையால் சைகை செய்யவேண்டும்.
3. ஒவ்வொரு சுற்றிலும் அஸ்வத் கல்லின் மூலையை அடைந்ததும் “அல்லாஹு அக்பர்” எனக் கூற வேண்டும்.
4. ஏழு சுற்றுக்கள் முடிந்ததும் ஜம்ஜம் நீர் அருந்தவேண்டும்.
5. ஜம்ஜம் நீர் அருந்தியப் பின்னர் மகாமு இப்ராஹீம் என்னும் இடத்தில் இரண்டு ரக்அத்துக்கள் தொழ வேண்டும். முடியாவிட்டால் கஅபாவின் ஏதாவது ஒரு பகுதியில் இரண்டு ரக்அத்துக்கள் தொழவேண்டும்.
6. கஅபாவை ஏழு சுற்றுக்கள் சுற்றுவதும் மகாமு இப்ராஹீமில் இரண்டு ரக்அத்கள் தொழுவதும்தான் தவாஃப் ஆகும்.

## ஹஜ்ஜின் சட்டங்கள்
## துல் ஹஜ் 8

1. இஹ்ராமிற்குரிய ஆடை அணிதல்.
2. “லப்பைக்க ஹஜ்ஜன்” என வாயால் மொழிதல்.
3. உரத்த குரலில் தொடர்ந்து தல்பியா கூறுதல்.
4. ஃபஜ்ரு தொழுகைக்கு பிறகு மினாவுக்கு புறப்படுதல்.
5. மினாவில் லுஹர், அஸர், இஷா ஆகிய தொழுகைகளை இரண்டு ரக்அத்களாக அவற்றிற்குரிய நேரங்களில் தொழுதல். மக்ரிப் ஃபஜ்ர் தொழுகைகளை அவற்றிற்குரிய நேரங்களில் முழுமையாகத் தொழுதல்.

## துல்ஹஜ் 9

1. சூரிய உதயத்திற்கு பிறகு அரஃபாவுக்கு புறப்படுதல்.

2. லுஹர், அஸர் ஆகிய தொழுகைகளை ''ஜம்வு மற்றும் கஸ்ராக" லுஹர் நேரத்தில் தொழுதல்.
3. அதிகமாக பிரார்த்தனையில் ஈடுபடுதல்.
4. சூரியன் மறையும் வரை அரஃபாவில் தங்குதல்.
5. சூரியன் மறைந்த பிறகு முஸ்தலிஃபாவுக்கு புறப்படுதல்.
6. முஸ்தலிஃபாவில் மஃரிபையும், இஷாவையும் ''ஜம்வு மற்றும் கஸ்ராக" தொழுதல்.
7. முஸ்தலிஃபாவில் இரவு தூங்குதல்.

## துல்ஹஜ் 10

1. முஸ்தலிஃபாவில் ஃபஜ்ர் தொழுதல்.
2. ஃபஜ்ரு தொழுகைக்குப் பிறகு சூரிய உதயத்திற்கு முன்பாக கல்லெறிவதற்குப் புறப்படுதல்.
3. ஜம்ரத்துல் அகபாவில் 7 சிறு கற்களை எறிதல்.
4. ஆண்கள் மொட்டை அடித்தல் அல்லது பரவலாக முடியைக் குறைத்துக் கொள்ளுதல்.
5. பெண்கள் சிறிதளவு தலைமுடியை குறைத்தல்.
6. குர்பானி கொடுத்தல்.
7. இஹ்ராமிலிருந்து வெளியேறுதல்.
8. தவாஃபுல் இஃபாழா நிறைவேற்றுதல்.
7. ஸஃபா மர்வாவுக்கிடையே ஸயீ செய்தல்.
8. மினாவில் இரவு தங்குதல் (தூங்குதல்).



## துல்ஹஜ் 11, 12, 13

11,12,13 ஆகிய நாட்களில் லுஹர் தொழுகைக்குப்பிறகு ஒவ்வொரு நாளும் ஒரு ஜம்ரத்தில் 7 கற்கள் வீதம் 3 ஜம்ரத்துக்களில் 21 கற்கள் எறிய வேண்டும்.

விரும்புகிறவர் பிறை 12ல் கல்லெறிந்துவிட்டு மினாவிலிருந்து சென்றுவிடலாம். அப்படி ஒருவர் செல்வதாக இருந்தால் மக்ரிபிற்கு முன்னதாகவே சென்றுவிட வேண்டும். தவறினால் பிறை 13ல் கல்லெறிந்துவிட்டுத்தான் அவர் மினாவைவிட்டுச் செல்லவேண்டும்.

மேற்கண்ட சட்டங்களுக்கான ஆதாரங்கள் பின்வருமாறு:

# இஹ்ராமின் சட்டங்கள்

## இஹ்ராம்

عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا زَوْجِ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَتْ كُنْتُ أُطَيِّبُ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لِإِحْرَامِهِ حِينَ يُحْرِمُ وَلِحِلِّهِ قَبْلَ أَنْ يَطُوفَ بِالْبَيْتِ.

رواه البخاري رقم الحديث1539

இறைத்தூதர்(ஸல்) இஹ்ராம் அணிந்த நேரத்தில், அவர்கள் இஹ்ராம் அணிவதற்காக நான் நறுமணம் பூசிவிட்டேன். இதுபோல் இஹ்ராமிலிருந்து அவர்கள் விடுபட்டபோதும் (பத்தாம் நாள்) கஅபாவை வலம் வருவதற்கு முன்னர் அவர்களுக்கு நான் நறுமணம் பூசிவிட்டேன்.

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1539***

இஹ்ராமுக்கு முன்பு குளித்து விட்டு நறுமணம் பூசிக் கொள்ள லாம். இஹ்ராம் கட்டிய பிறகு நறுமணப் பொருட்களை பயன் படுத்த தடை உள்ளது. இஹ்ராமுக்கு முன் நறுமணம் பூசி அந்த நறுமணம் இஹ்ராமுக்குப் பின்பும் நீடிப்பதில் தவறில்லை என்பதனை மேற்கண்ட நபிமொழியிலிருந்து அறியலாம்.

عَنْ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ سُئِلَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مَا يَلْبَسُ الْمُحْرِمُ مِنْ الثِّيَابِ فَقَالَ لاَ يَلْبَسْ الْقَمِيصَ وَلاَ الْعَمَائِمَ وَلاَ السَّرَاوِيلَاتِ وَلاَ الْبُرْنُسَ وَلاَ ثَوْبًا مَسَّهُ زَعْفَرَانٌ وَلاَ وَرْسٌ وَإِنْ لَمْ يَجِدْ نَعْلَيْنِ فَلْيَلْبَسْ الْخُفَّيْنِ وَلْيَقْطَعْهُمَا حَتَّى يَكُونَا أَسْفَلَ مِنْ الْكَعْبَيْنِ

رواه البخاري رقم الحديث1842 ومسلم2012

*"இஹ்ராம் அணிந்தவர் எத்தகைய ஆடைகளை அணியலாம்" என இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது.*

*"சட்டை, தலைப்பாகை, கால்சட்டை, தொப்பி, குங்குமச் சாயம் இடப்பட்ட ஆடை, வர்ஸ் எனும் செடியின் சாயம் இடப்பட்ட ஆடை ஆகியவற்றை அணியக் கூடாது! செருப்பு கிடைக்காத வர்கள் (தோலினால் செய்யப்பட்ட) காலுறைகளை அணிந்து கொள்ளலாம். ஆயினும் கரண்டைக்குக் கீழே இருக்கும்படி (மேலிருந்து கரண்டைக்குக் கீழ் வரை) அவற்றை வெட்டி விட வேண்டும்!" என இறைத்தூதர்(ஸல்) பதிலளித்தார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு உமர் (ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1842, முஸ்லிம்: 2012***

**عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّـهُ عَنْهُمَـا قَـالَ خَطَبَنَـا النَّبِـيُّ صَـلَّى اللَّـهُ عَلَيْهِ وَسَلَّمَ بِعَرَفَـاتٍ فَقَـالَ مَـنْ لَـمْ يَجِـدْ الْـإِزَارَ فَلْيَلْبَـسْ السَّـرَاوِيلَ وَمَـنْ لَـمْ يَجِـدْ النَّعْلَيْـنِ فَلْيَلْبَـسْ الْخُفَّيْـنِ.**

**رواه الباخاري رقم الحديث1843 ومسلم رقم الحديث2015**

*இறைத்தூதர்(ஸல்) அரஃபாவில் எங்களுக்கு உரை நிகழ்த்திய போது, 'கீழாடை இல்லாதவர் கால் சட்டைகளை அணி யட்டும்! செருப்பு இல்லாதவர் (தோலினால் செய்யப்பட்ட) காலுறைகளை அணிந்து கொள்ளட்டும்!" எனக் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1843, முஸ்லிம்: 2015.***

**عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رَضِيَ اللَّـهُ عَنْهُمَـا قَـالَ:...وَلَا تَنْتَقِـبْ الْمَـرْأَةُ الْمُحْرِمَـةُ وَلَـا تَلْبَـسْ الْقُفَّـازَيْنِ.**

**رواه البخاري رقم الحديث1838**

*"இஹ்ராம் கட்டிய பெண் தன் முகத்தை மறைக்கவோ, கை யுறைகளை அணியவோ வேண்டாம்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு உமர்(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1838***

**عن عُثْمَانَ بْنَ عَفَّانَ رضـــي الله عنـــه: قَالَ رَسُولُ اللَّهِ صَـــلَّى اللَّـــهُ عَلَيْـــهِ وَسَلَّمَ لاَ يَنْكِحُ الْمُحْـــرِمُ وَلاَ يُنْكَـــحُ وَلاَ يَخْطُـــبُ.**

**رواه مسلم رقم الحديث2522**

"இஹ்ராம் கட்டியவர் திருமணம் செய்யவோ, பிறருக்கு திருமணம் செய்துவைக்கவோ, அல்லது பெண் பேசவோ கூடாது" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி)**
**நூல்: முஸ்லிம், ஹதீஸ் எண்: 2522**

"ஹஜ்ஜின்போது உடலுறவு கொள்வது, கெட்ட வார்த்தைகள் பேசுவது, சச்சரவில் ஈடுபடுவது ஆகியவை கூடாது'' என அல்லாஹ் கூறுகிறான்.

**يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا لاَ تَقْتُلُـــوا الصَّـــيْدَ وَأَنْتُـــمْ حُـــرُمٌ وَمَـــنْ قَتَلَـــهُ مِنْكُـــمْ مُتَعَمِّدًا فَجَزَاءٌ مِثْلُ مَا قَتَلَ مِنَ النَّعَمِ يَحْكُمُ بِـــهِ ذَوَا عَـــدْلٍ مِنْكُـــمْ هَـــدْيًا بَالِغَ الْكَعْبَةِ أَوْ كَفَّارَةٌ طَعَامُ مَسَـــاكِينَ أَوْ عَـــدْلُ ذَلِـــكَ صِـــيَامًا لِيَـــذُوقَ وَبَالَ أَمْرِهِ عَفَا اللَّهُ عَمَّا سَلَفَ وَمَـــنْ عَـــادَ فَيَنْتَقِـــمُ اللَّـــهُ مِنْـــهُ وَاللَّـــهُ عَزِيزٌ ذُو انْتِقَـــامٍ.**

இறைநம்பிக்கையாளர்களே! நீங்கள் 'இஹ்ராம்' நிலையில் இருக்கும்போது வேட்டைப் பிராணிகளைக் கொல்லாதீர்கள். உங்களில் ஒருவர் அறிந்துகொண்டே அதைக் கொன்றால், கால்நடைகளிலிருந்து அவர் கொன்றதற்குச் சமமான ஒன்று பரிகாரமாகும். உங்களில் நீதியுடைய இருவர் அதற்குத் தீர்ப்பளிக்க வேண்டும். அது கஅபாவை அடைய வேண்டிய பலிப் பிராணியாகும். அல்லது ஏழைகளுக்கு உணவளிப்பது பரிகாரமாகும். அல்லது தன்னுடைய செயலின் பலனை அனுபவிக்கும் பொருட்டு அதற்கு (மேற்கண்ட பகரங்களுக்கு) ஈடான நோன்புகளை நோற்க வேண்டும். முன்னர் நடந்ததை அல்லாஹ் மன்னித்துவிட்டான். மீண்டும் (இவ்வாறு) செய்பவரை அல்லாஹ் பழிதீர்ப்பான். அவன் மிகைத்தவன், பழிதீர்க்கும் உரிமையாளன்.

**திருக்குர்ஆன் 5:95**

## பிறர் வேட்டையாடியதை உண்ணலாமா ?

**عــن عبــد الله بــن أبي قتــادة رضــي الله عنــه قــال...**

**قُلْتُ يَا رَسُولَ اللَّهِ أَصَبْتُ حِمَارَ وَحْــشٍ وَعِنْــدِي مِنْــهُ فَاضِــلَةٌ فَقَــالَ لِلْقَوْمِ كُلُوا وَهُمْ مُحْرِمُونَ**

**رواه البخاري رقــم الحــديث 1821**

*..."இறைத்தூதர் அவர்களே! நான் காட்டுக் கழுதையை வேட்டையாடினேன். அதில் சிறிதளவு என்னிடம் மீதம் உள்ளது!" என நான் கூறினேன்.*

*அப்போது மக்கள் அனைவரும் இஹ்ராம் அணிந்திருந்த நிலையிலும், ''உண்ணுங்கள்!'' என இறைத்தூதர்(ஸல்) மக்களிடம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ கதாதா(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1821***

## தீங்கு ஏற்படுத்தும் உயிரினத்தைக் கொல்லலாமா

*மேற்கண்ட ஹதீஸின் அடிப்படையில் இஹ்ராமில் இல்லாத ஒருவர் தான் வேட்டையாடியதை இஹ்ராமில் இருப்பவருக்கு அளித்தால் அதை இஹ்ராமில் இருப்பவர் உண்ணலாம். ஆனால், அவர் வேட்டையாடுபவருக்கு அதற்காக சைகை முதற்கொண்டு எந்த உதவியும் செய்தல் கூடாது என ஹதீஸ்கள் உள்ளன.*

**قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ خَمْسٌ مِنْ الدَّوَابِّ لَا حَرَجَ عَلَى مَــنْ قَتَلَهُنَّ الْغُرَابُ وَالْحِدَأَةُ وَالْفَأْرَةُ وَالْعَقْرَبُ وَالْكَلْــبُ الْعَقُــورُ.**

**رواه البخاري رقــم الحــديث 1826**

*"ஐந்து உயிரினங்கள் தீங்கு இழைக்கக் கூடியவை! அவற்றை இஹ்ராமில் இருப்பவர் கொன்றால் அவரின் மீது குற்றம் இல்லை! அவை காகம், பருந்து, தேள், எலி, வெறிநாய் ஆகியன ஆகும்!" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்*

***அறிவித்தவர்கள்: இப்னு உமர், ஹஃப்ஸா மற்றும் ஆயிஷா(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1826, 1827, 1828, 1829***

**عَنْ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ بَيْنَمَا نَحْـــنُ مَـــعَ النَّبِـــيِّ صَـــلَّى اللَّـــهُ عَلَيْهِ وَسَلَّمَ فِي غَارٍ بِمِنًى إِذْ نَزَلَ عَلَيْهِ وَالْمُرْسَـــلَاتِ وَإِنَّـــهُ لَيَتْلُوهَـــا وَإِنِّـــي لَأَتَلَقَّاهَا مِنْ فِيهِ وَإِنَّ فَاهُ لَرَطْبٌ بِهَـــا إِذْ وَثَبَـــتْ عَلَيْنَـــا حَيَّـــةٌ فَقَـــالَ النَّبِيُّ صَلَّى اللَّـــهُ عَلَيْـــهِ وَسَـــلَّمَ اقْتُلُوهَـــا فَابْتَـــدَرْنَاهَا فَـــذَهَبَتْ فَقَـــالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وُقِيَـــتْ شَـــرَّكُمْ كَمَـــا وُقِيتُـــمْ شَـــرَّهَا.**

**رواه البخاري رقـــم الحـــديث 1830**

*நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் மினாவிலுள்ள ஒரு குகையிலிருந்தபோது 'வல்முர்ஸலாத்" எனும் அத்தியாயம் அவர்களுக்கு அருளப்பட்டது. அவர்கள் அதை ஓதிக் காட்டி னார்கள். நான் அவர்களின் திருவாயிலிருந்து (கேட்டு) அதை மனனம் செய்து கொண்டிருந்தேன். அதை ஓதியதால் அவர்களின் வாய் ஈரமாக இருந்தது. அப்போது ஒரு பாம்பு எங்களை நோக்கிச் சீறியது.*

*"அதைக் கொல்லுங்கள்!" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

*நாங்கள் அதைக்கொல்ல விரைந்தபோது அது சென்றுவிட்டது.*

*"அதன் தீங்கிலிருந்து நீங்கள் தப்பித்ததுபோல் உங்கள் தீங்கில் இருந்து அதுவும் தப்பித்துவிட்டது!" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1830***

**عن ابن عمر رضي الله عنه: أَنَّ النبي صلى الله عليه وسلم كَـــانَ يَـــأْمُرُ بِقَتْلِ الْكَلْـــبِ الْعَقُـــورِ وَالْفَـــأْرَةِ وَالْعَقْـــرَبِ وَالْحُـــدَيَّا وَالْغُـــرَابِ وَالْحَيَّـــةِ قَالَ وَفِي الصَّـــلَاةِ أَيْضًـــا.**

**رواه مسلم رقم الحديث2076**

*தொழுகையிலும் இவ்வாறுதான் என இப்னு உமர்(ரலி) கூறினார்கள் என்ற செய்தி முஸ்லிமில் (2076) உள்ளது.*

**عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِـــيَ اللَّـــهُ عَنْهُمَـــا أن النـــبي صـــلى الله عليـــه وســـلم**

**قال: اغْسِلُوهُ بِمَاءٍ وَسِدْرٍ وَكَفِّنُوهُ فِي ثَوْبَيْهِ وَلَا تُخَمِّرُوا رَأْسَهُ فَإِنَّ اللَّهَ يَبْعَثُهُ يَوْمَ الْقِيَامَةِ مُلَبِّيًا**

**رواه مسلم رقم الحديث 2092**

*“இஹ்ராம் அணிந்தவர் (அதே நிலையில்) இறந்துவிட்டால் தண்ணீர் மற்றும் இலந்த இலைகொண்டு அவரைக் குளிப் பாட்டுங்கள். அந்த இரண்டு துணிகளாலேயே அவருக்கு கஃபனிடுங்கள். அவரின் தலையை மூட வேண்டாம்” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு அப்பாஸ் (ரலி)***
***நூல்: ஸஹீஹ் முஸ்லிம், ஹதீஸ் எண்: 2092***

*இது தொடர்பான செய்திகள் ஸஹீஹ் முஸ்லிமில் ஹதீஸ் எண் 2092 முதல் 2100 வரை உள்ளன. அவற்றில் முகத்தை மூடக் கூடாது என்றும் இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள் என இடம் பெற்றுள்ளது. ஆனால் பெண்களுக்கு இஹ்ராம் ஆடை ஒன்று தனியாக இல்லை. மட்டுமின்றி அவர்கள் தலையை மறைத்தும் முகத்தை மட்டும் மறைக்காமலும் இருக்க வேண்டும் என்றும் சட்டம் உள்ளது.*



## இஹ்ராமில் இருக்கும்போது குடை பிடிக்கலாமா?

**عن أُمِّ الْحُصَيْنِ تَقُولُ حَجَجْتُ مَعَ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ حَجَّةَ الْوَدَاعِ فَرَأَيْتُهُ حِينَ رَمَى جَمْرَةَ الْعَقَبَةِ وَانْصَرَفَ وَهُوَ عَلَى رَاحِلَتِهِ وَمَعَهُ بِلَالٌ وَأُسَامَةُ أَحَدُهُمَا يَقُودُ بِهِ رَاحِلَتَهُ وَالْآخَرُ رَافِعٌ ثَوْبَهُ عَلَى رَأْسِ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مِنْ الشَّمْسِ**

**رواه مسلم رقم الحديث 2287**

*விடைபெறும் ஹஜ்ஜில் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் நான் ஹஜ் செய்தேன். அவர்கள் ஜம்ரத்துல் அகபாவில் கல் எறிந்துவிட்டு தம் வாகனத்தில் அமர்ந்தவர்களாகத் திரும்பி னார்கள். அவர்களுடன் பிலாலும் உஸாமாவும் இருந்தார்கள். அவர்களில் ஒருவர் ஒட்டகத்தை ஓட்டிக் கொண்டிருந்தார். மற்றொருவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் மீது வெயில்*

படாமல் இருக்க தம் ஆடையை அவர்களின் தலைக்கு மேல் உயர்த்திப்பிடித்துக் கொண்டார்.

**அறிவித்தவர்: உம்முல் ஹுஸைன்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் முஸ்லிம், ஹதீஸ் எண்: 2287**

எனவே இஹ்ராமில் இருக்கும்போது தலையில் வெயில் படாதிருக்க குடை போன்றவற்றை பயன்படுத்திக் கொள்ளலாம்.

## இஹ்ராமில் தலையை மழித்தல்

**عن كَعْبُ بْنُ عُجْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْه وَسَلَّمَ وَقَفَ عَلَيْهِ وَرَأْسُهُ يَتَهَافَتُ قَمْلًا فَقَالَ أَيُؤْذِيكَ هَوَامُّكَ قُلْتُ نَعَمْ قَالَ فَاحْلِقْ رَأْسَكَ قَالَ فَفِيَّ نَزَلَتْ هَذِهِ الْآيَةُ فَمَنْ كَانَ مِنْكُمْ مَرِيضًا أَوْ بِهِ أَذًى مِنْ رَأْسِهِ فَفِدْيَةٌ مِنْ صِيَامٍ أَوْ صَدَقَةٍ أَوْ نُسُكٍ فَقَالَ لِي رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ صُمْ ثَلَاثَةَ أَيَّامٍ أَوْ تَصَدَّقْ بِفَرَقٍ بَيْنَ سِتَّةِ مَسَاكِينَ**

**رواه مسلم رقم الحديث2082**

இறைத்தூதர்(ஸல்) என்னருகில் நின்றிருந்தார்கள். என் தலையிலிருந்து பேன்கள் கொட்டிக் கொண்டிருந்தன.

“உம் பேன்கள் உமக்குத் துன்பம் தருகின்றனவா?” என இறைத் தூதர்(ஸல்) கேட்டார்கள்.

நான் “ஆம்” என்றேன்.

‘‘அப்படியானால் உன் தலையை மழித்துக் கொள்!’’ என அவர்கள் கூறினார்கள்.

அப்போது, ‘‘பலிப்பிராணி இடத்தை அடையும் முன்னர் உங்களின் தலைமுடிகளைக் களையாதீர்கள். ஆயினும், உங்களில் நோயாளியாய் இருப்பவர் அல்லது தலையில் ஏதேனும் தொந்தரவு தரும் பிணியின் காரணமாய் (தலைமுடியை மழித்தால்) அதற்குப் பரிகாரமாக நோன்பு நோற்க வேண்டும் அல்லது தர்மம் கொடுக்க வேண்டும் அல்லது பலியிட வேண்டும்” (திருக்குர்ஆன் 2:196) என்னும் வசனம் அருளப்பட்டது.

*எனவே, "ஓர் ஆட்டை அறுத்து பலிகொடு! அல்லது மூன்று நாட்கள் நோன்பு நோற்றுக்கொள்! அல்லது மூன்று ஸாவு பேரீச்சம் பழங்களை ஆறு ஏழைகளுக்கு பங்கிட்டு கொடுத்து விடு!" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: கஅப் இப்னு உஜ்ரா(ரலி)***
***நூல்: ஸஹீஹ் முஸ்லிம், ஹதீஸ் எண்: 2082.***
***ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1814***

## இஹ்ராம் நிலையில் இரத்தம் கொடுக்கலாமா ?

**عن ابْنَ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا يَقُولُ احْتَجَمَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَهُوَ مُحْرِمٌ**

**رواه البخاري رقم الحديث1835**

*இறைத்தூதர்(ஸல்) இஹ்ராம் அணிந்திருந்தபோது இரத்தம் குத்தி எடுத்தார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1835***

**عَنْ ابْنِ بُحَيْنَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ احْتَجَمَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَهُوَ مُحْرِمٌ بِلَحْيِ جَمَلٍ فِي وَسَطِ رَأْسِهِ**

**رواه البخاري رقم الحديث1836**

*இறைத்தூதர்(ஸல்) இஹ்ராம் அணிந்திருந்த நிலையில், 'லஹ்யு ஜமல்' என்னுமிடத்தில் தம் தலையின் நடுப்பகுதியில் இரத்தம் குத்தி எடுத்தார்கள்.* ***அறிவித்தவர்: இப்னு புஹைனா(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1836***

*மேற்கண்ட ஹதீஸ்களில் அடிப்படையில் இஹ்ராமில் இருக்கும்போது ஒருவருக்கு இரத்தம் எடுக்க வேண்டிய அல்லது பெறவேண்டிய நிலை ஏற்பட்டால் தாராளமாக இந்த இரண்டையும் செய்து கொள்ளலாம்.*

## நிய்யத்

**عن أَنَسٌ رضي الله عنه قال: سَمِعْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ**

عَلَيْـــهِ وَسَـــلَّمَ يَقُـــولُ: لَبَّيْـــكَ عُمْـــرَةً وَحَجًّـــا.

**رواه مسلم رقم الحديث2168 ورواه البخاري1563**

*"லப்பைக்க உம்ரத்தன் வ ஹஜ்ஜன்" என ஹஜ் உம்ராவுக்காக இறைத்தூதர்(ஸல்) கூறியதை நான் செவியுற்றேன்.*

***அறிவித்தவர்: அனஸ்(ரலி)***

***நூல்: ஸஹீஹ் முஸ்லிம், ஹதீஸ் எண்: 2168, ஸஹீஹ் அல் புகாரீ:1563***

நிய்யத் என்பது குறிப்பிட்ட காரியங்களைச் செய்வதற்கு மனதில் எண்ணுவதாகும். ஆனால் ஹஜ் உம்ராவிற்கு மட்டும் அதன் வாசகங்களை வாயால் மொழிய வேண்டும். அப்போது இஹ்ராம் உடையில் இருக்கவேண்டும்.

உம்ரா செய்யும்போது, **"லப்பைக்க உம்ரத்தன்"** என்றும், ஹஜ் செய்யும்போது, **"லப்பைக்க ஹஜ்ஜன்"** என்றும் கூற வேண்டும்.

## தல்பியா

عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رَضِـــيَ اللَّـــهُ عَنْهُمَـــا أَنَّ تَلْبِيَـــةَ رَسُـــولِ اللَّـــهِ صَلَّى اللَّهُ عَلَيْـــهِ وَسَـــلَّمَ لَبَّيْـــكَ اللَّهُـــمَّ لَبَّيْـــكَ لَبَّيْـــكَ لَـــا شَـــرِيكَ لَـــكَ لَبَّيْكَ إِنَّ الْحَمْدَ وَالنِّعْمَةَ لَكَ وَالْمُلْكَ لَـــا شَـــرِيكَ لَـــكَ.

**رواه البخاري رقم الحديث1549 ومسلم رقم الحديث2029**

இறைத்தூதர்(ஸல்) துல்ஹுலைஃபா என்னும் இடத்தில் வாகனத்தின் மீது அமர்ந்து **"லப்பைக் அல்லாஹும்ம லப்பைக், லப்பைக் லாஷரீக லக்க லப்பைக், இன்னல் ஹம்த வன்னிஃமத லக்க வல் முல்க் லாஷரீக லக்"** *(பொருள்: "இதோ, உன் அழைப்பை ஏற்று வந்துவிட்டேன்! இறைவா! இதோ வந்துவிட்டேன்! உனக்கு எந்த இணையுமில்லை! வந்துவிட்டேன். புகழும், அருட்கொடையும், ஆட்சியும் உனக்கே உரியன! உனக்கு இணையானவர் எவருமில்லை.)" எனக் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு உமர் (ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1549, முஸ்லிம்:2029.***

**عَنْ خَلاَّدِ بْنِ السَّائِبِ عَنْ أَبِيهِ أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ أَتَانِي جِبْرِيلُ فَأَمَرَنِي أَنْ آمُرَ أَصْحَابِي أَنْ يَرْفَعُوا أَصْوَاتَهُمْ بِالإِهْلاَلِ.**

**رواه ابن ماجة 2913 وابن حبان والترمذي.**

*''என்னிடம் ஜிப்ரீல்(அலை) வந்து இஹ்ராமின்போதும், தல்பியாவின்போதும் என் தோழர்கள் சப்தத்தை உயர்த்து வதற்கு நான் கட்டளையிட வேண்டும் என எனக்குக் கட்டளை யிட்டார்கள்'' என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: கல்லாத் இப்னு ஸாயிப்(ரலி)***

***நூல்: இப்னு மாஜா, ஹதீஸ் எண்: 291.3, ஹாகிம், இப்னு ஹிப்பான் மற்றும் திர்மிதீ***

**عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ أُسَامَةَ بْنَ زَيْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا كَانَ رِدْفَ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مِنْ عَرَفَةَ إِلَى الْمُزْدَلِفَةِ ثُمَّ أَرْدَفَ الْفَضْلَ مِنْ الْمُزْدَلِفَةِ إِلَى مِنًى قَالَ فَكِلَاهُمَا قَالَا لَمْ يَزَلْ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يُلَبِّي حَتَّى رَمَى جَمْرَةَ الْعَقَبَةِ.**

**رواه البخاري رقم الحديث1686ـ1687**

*அரஃபாவிலிருந்து முஸ்தலிஃபா வரை இறைத்தூதர்(ஸல்) அவர்களின் பின்னால் (வாகனத்தில்) உஸாமா இப்னு ஸைத் (ரலி) அமர்ந்திருந்தார். பிறகு முஸ்தலிஃபாவிலிருந்து மினா வரை ஃபள்ல்(ரலி) அவர்களை இறைத்தூதர்(ஸல்) தமக்குப் பின்னால் ஏற்றினார்கள்.*

*''ஜம்ரத்துல் அகபாவில் கல்லெறியும்வரை இறைத்தூதர்(ஸல்) தல்பியா கூறிக் கொண்டே இருந்தார்கள்'' என அவ்விருவருமே கூறினார்கள்.*

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1686, 1688.***

**عَنْ نَافِعٍ قَالَ كَانَ ابْنُ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا إِذَا دَخَلَ أَدْنَى الْحَرَمِ أَمْسَكَ عَنْ التَّلْبِيَةِ ثُمَّ يَبِيتُ بِذِي طِوًى ثُمَّ يُصَلِّي بِهِ الصُّبْحَ وَيَغْتَسِلُ وَيُحَدِّثُ أَنَّ نَبِيَّ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ كَانَ يَفْعَلُ ذَلِكَ.**

## رواه البخاري رقم الحديث1573

*இப்னு உமர்(ரலி) கஅபாவை அடைந்ததும் தல்பியாவை நிறுத்திக் கொள்வார்கள். தூதுவா என்னும் இடத்தில் இரவு தங்கிவிட்டு அந்த இடத்திலேயே ஃபஜ்ரு தொழுத பிறகு குளிப் பார்கள் இறைத்தூதர்(ஸல்) இவ்வாறு செய்துள்ளதாகவும் குறிப்பிட்டார்கள்.*

***அறிவித்தவர்: நாஃபிஃ(ரஹ்)***

***நூல்: நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1573,ஸஹீஹ் முஸ்லிம்.***

# உம்ராவின் சட்டங்கள்

## தவாஃப்

عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لَمَّا قَدِمَ مَكَّةَ أَتَى الْحَجَرَ فَاسْتَلَمَهُ ثُمَّ مَشَى عَلَى يَمِينِهِ فَرَمَلَ ثَلَاثًا وَمَشَى أَرْبَعًا.

**رواه مسلم رقم الحديث2139**

*இறைத்தூதர்(ஸல்) மக்காவிற்கு வந்தபோது ஹஜருல் அஸ்வத் கல்லின் அருகில் வந்தார்கள். அதைத் தொட்டார்கள். பின்னர் வலப் பக்கமாக நடந்தார்கள். மூன்று முறை ஓடினார்கள். நான்கு முறை நடந்தார்கள்.*

***அறிவித்தவர்: ஜாபிர் (ரலி)***

***நூல்: ஸஹீஹ் முஸ்லிம், ஹதீஸ் எண்: 2139***

عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ كَانَ إِذَا طَافَ فِي الْحَجِّ أَوْ الْعُمْرَةِ أَوَّلَ مَا يَقْدَمُ سَعَى ثَلَاثَةَ أَطْوَافٍ وَمَشَى أَرْبَعَةً ثُمَّ سَجَدَ سَجْدَتَيْنِ ثُمَّ يَطُوفُ بَيْنَ الصَّفَا وَالْمَرْوَةِ

**رواه البخاري رقم الحديث1616**

*இறைத்தூதர்(ஸல்) ஹஜ்ஜுக்காகவோ உம்ராவுக்காகவோ வந்தால் முதன்முதலாக வலம் வருவார்கள். அதில் முதல் மூன்று சுற்றுக்களில் விரைந்து ஓடுவார்கள்; பிந்திய நான்கு சுற்றுக்களில் நடப்பார்கள். பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுது விட்டு, ஸஃபா, மர்வாவிற்கிடையில் ஓடுவார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு உமர்(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1616.***

عَنْ أُمِّ سَلَمَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا زَوْجِ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَتْ شَكَوْتُ إِلَى رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَنِّي أَشْتَكِي فَقَالَ طُوفِي

مِنْ وَرَاءِ النَّاسِ وَأَنْتِ رَاكِبَةٌ فَطُفْتُ وَرَسُولُ اللَّهِ صَلَّى اللَّــهُ عَلَيْــهِ وَسَــلَّمَ حِينَئِذٍ يُصَلِّي إِلَى جَنْبِ الْبَيْتِ وَهُوَ يَقْــرَأُ وَالطُّــورِ وَكِتَــابٍ مَسْــطُورٍ

**رواه البخاري رقم الحديث1619**

*"நான் நோயுற்றுள்ளேன்" என இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் முறையிட்டேன்.*

*"நீ மக்களுக்குப் பின்னால் வாகனத்தில் அமர்ந்து வலம்வா" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

*நான் அது போன்றே வலம்வந்தேன். அப்போது இறைத்தூதர் (ஸல்) 'அத்தூர்' என்னும் அத்தியாயத்தை ஓதியவாறு கஅபா வின் ஒரு பக்கத்தில் தொழுது கொண்டிருந்தார்கள்.*

***அறிவித்தவர்: உம்மு ஸலமா(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1619, முஸ்லிம்.***

## ஹஜருல் அஸ்வத்

عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ سَأَلْتُ النَّبِــيَّ صَــلَّى اللَّــهُ عَلَيْــهِ وَسَــلَّمَ عَنْ الْجَدْرِ أَمِنَ الْبَيْتِ هُوَ قَالَ نَعَمْ...

**وراه البخاري رقم الحـــديث1584**

*...கஅபாவின் அருகிலுள்ள ஒரு (வளைந்த சிறு) சுவர் குறித்து, "இது கஅபாவில் சேர்ந்ததா?' என இறைத்தூதர்(ஸல்) அவர் களிடம் கேட்டேன். "ஆம்!" என அவர்கள் பதிலளித்தார்கள்...*

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1584***

*எனவே, தவாஃபின்போது கஅபாவில் இருக்கும் அந்த அரை வட்டத்தையும் சேர்த்துத்தான் வலம் வரவேண்டும்.*

عن ابْنَ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَــــالَ: رَأَيْتُ رَسُولَ اللَّــهِ صَــلَّى اللَّــهُ عَلَيْــهِ وَسَــــلَّمَ يَسْــــتَلِمُهُ وَيُقَبِّلُـــهُ.

**رواه البخاري رقم الحديث1611**

தவாஃபின்போது, இறைத்தூதர்(ஸல்) ஹஜருல் அஸ்வத்தை தொட்டதையும் முத்தமிட்டதையும் நான் பார்த்துள்ளேன்.

**அறிவித்தவர்: இப்னு உமர்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 1611**

عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ طَافَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فِي حَجَّةِ الْوَدَاعِ عَلَى بَعِيرٍ يَسْتَلِمُ الرُّكْنَ.

**رواه البخاري رقم الحديث1608**

தவாஃபின்போது இறைத்தூதர்(ஸல்) வாகனத்தின் அமர்ந்த வாறு ஹஜ்ருல் அஸ்வதை தொட்டார்கள்.

**அறிவித்தவர்: ஆமிர் இப்னு அப்பாஸ்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 1608**

عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ طَافَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ بِالْبَيْتِ عَلَى بَعِيرٍ كُلَّمَا أَتَى الرُّكْنَ أَشَارَ إِلَيْهِ بِشَيْءٍ كَانَ عِنْدَهُ وَكَبَّرَ.

**رواه البخاري رقم الحديث1613**

தவாஃபின்போது இறைத்தூதர்(ஸல்) ஹஜருல் அஸ்வத் மூலையை அடைந்த உடன் தம் கையால் சைகை செய்தார்கள். தக்பீரும் கூறினார்கள்.

**அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 1612, 1613**

عن عَبْدَ اللَّهِ بْنَ السَّائِبِ أَخْبَرَهُ أَنَّهُ سَمِعَ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ فِيمَا بَيْنَ رُكْنَيْ بَنِي جُمَحَ وَالرُّكْنِ الْأَسْوَدِ رَبَّنَا آتِنَا فِي الدُّنْيَا حَسَنَةً وَفِي الْآخِرَةِ حَسَنَةً وَقِنَا عَذَابَ النَّارِ

**رواه أحمد رقم الحديث14851 وأبو داود1616**

ருக்னுல் யமானிக்கும் (கஅபாவின் ஒரு மூலை) ஹஜருல் அஸ்வத் திற்கும் இடையே தவாஃப் செய்யும்போது **ரப்பனா ஆத்தினா ஃபித்துன்யா ஹஸனதன் வஃபில் ஆகிரத்தி ஹஸனத்தன் வ(க்)கினா அதாபன்னார்** (பொருள்: எங்கள் இறைவா இவ்வுலகில் எங்களுக்கு நற்பாக்கியங்களை வழங்குவாயாக! மறுமையிலும் நற்பாக்கியங்களை வழங்கு வாயாக! இன்னும்

எங்களை (நரக) நெருப்பின் வேதனையிலிருந்தும் காத்தருள் வாயாக! (திருக்குர்ஆன் 2:201) என்ற வசனத்தை இறைத்தூதர் (ஸல்) கூறியதை நான் செவியுற்றுள்ளேன்.

**அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு ஸாயிப்(ரலி)**
**நூல்: அஹ்மத் ஹதீஸ் எண்:14851, அபூ தாவூத் ஹதீஸ்எண்: 1616**

## எந்த எண்ணத்தில் ஹஜ்ருல் அஸ்வதை முத்தமிடவேண்டும் ?

عَنْ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ جَاءَ إِلَى الْحَجَرِ الأَسْوَدِ فَقَبَّلَهُ فَقَالَ إِنِّي أَعْلَمُ أَنَّكَ حَجَرٌ لاَ تَضُرُّ وَلاَ تَنْفَعُ وَلَوْلاَ أَنِّي رَأَيْتُ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يُقَبِّلُكَ مَا قَبَّلْتُكَ.

**وراه البخاري رقم الحديث1597**

உமர்(ரலி) ஹஜருல் அஸ்வத் அருகில் வந்து அதை முத்தமிட்டு விட்டு, “தீங்கோ, நன்மையோ அளிக்கமுடியாத ஒரு கல்தான் நீ என்பதை நான் நன்கறிவேன். இறைத்தூதர்(ஸல்) உன்னை முத்தமிட்டதை நான் காணவில்லையென்றால் உன்னை நான் முத்தமிட்டிருக்க மாட்டேன்” என்றார்கள்.

**அறிவித்தவர்: ஆபிஸ் இப்னு ரபீஆ**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1597**

இது ஒரு நபிவழி என்பதைத் தவிர அந்த கல்லுக்கு நன்மையோ தீமையோ அளிக்கும் ஆற்றல் இருக்கிறது என எண்ணக்கூடாது. நன்மையோ தீமையோ இறைவனின் நாட்டப்படிதான் நடக்கும்.

## மகாமு இப்ராஹீம்

عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ قَالَ سَمِعْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ مَنْ طَافَ بِالْبَيْتِ وَصَلَّى رَكْعَتَيْنِ كَانَ كَعِتْقِ رَقَبَةٍ.

**رواه ابن ماجة رقم الحديث2947**

கஅபாவை வலம் வந்து இரண்டு ரக்அத்துகள் தொழுதவர் ஓர் அடிமையை உரிமை விட்டவரைப் போலாவார்'' என இறைத்தூதர்(ஸல்) கூற நான் செவியுற்றுள்ளேன்.

**அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி)**
**நூல்: இப்னு மாஜா, ஹதீஸ் எண்: 2947**

**عن جـــابر رضـــي الله عنــه**

**أن النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْـــهِ وَسَـــلَّمَ كَـــانَ يَقْـــرَأُ فِـــي الـــرَّكْعَتَيْنِ قُـــلْ هُـــوَ اللَّهُ أَحَدٌ وَقُلْ يَا أَيُّهَـــا الْكَـــافِرُونَ...**

**رواه مسلم رقم الحديث 2137**

*...ஒவ்வொரு தவாஃபிற்கு பிறகும் (ஏழு சுற்றுக்கள் அடங்கியது ஒரு தவாஃப் ஆகும்) மகாமு இப்ராஹீம் என்னும் இடத்தில் இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள். அத்தொழுகையில் குல்யா அய்யுஹல் காஃபிரூன் (திருக்குர்ஆன் 109:1-6) சூராவையும், குல்ஹுவல்லாஹு அஹது (திருக்குர்ஆன் 114: 1-4) சூராவையும் ஓதுவார்கள்...*

***அறிவித்தவர்: ஜாபிர்(ரலி)***

***நூல்: முஸ்லிம், ஹதீஸ் எண்: 2137, ஸஹீஹ் அல் புகாரீ***

## ஜம்ஜம் நீர்

**عن أبي ذر رضي الله عنه قال قـــال رســـول الله صـــلى الله عليـــه وســـلم**

**إنها مباركة إنها طعام طعـــم رواه مســـلم 4520**

*நிச்சயமாக (ஜம்ஜம் நீர்) பரக்கத் செய்யப்பட்டதாகும். அருந்து பவருக்கு உணவாகும்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூதர்(ரலி)***

***நூல்: ஸஹீஹ் முஸ்லிம், ஹதீஸ் எண்: 4520***

## ஸயீ

*இறைத்தூதர்(ஸல்) ஸயீ செய்தபோது, ஸஃபாவில் ஆரம்பித்து மர்வாவில் முடித்தார்கள். (ஹதீஸ் சுருக்கம்)*

***அறிவித்தவர்: ஜாபிர்(ரலி)***

***நூல்: ஸஹீஹ் முஸ்லிம், ஹதீஸ் எண்: 2137***

*ஸஃபா - மர்வா இடையே ஓடுதல் ஸயீ எனப்படும். இவ்வாறு ஏழு தடவை ஓட வேண்டும். இந்த ஸயீ ஸஃபாவிலிருந்து ஆரம்பிக்கப்பட வேண்டும். ஸஃபாவிலும் மர்வாவிலும் ஓதவேண்டிய துஆவும் உள்ளன. ஸயீயின்போது பெண்களுக்கு ஓட்டமில்லை. மேலும் ஸஃபாவிலிருந்து மர்வாவிற்கு வந்தால் ஒரு ஓட்டம் எனக் கணக்கிட வேண்டும். அவ்வாறே மர்வா*

விலிருந்து ஸஃபாவுக்கு வந்தால் அதுவும் ஒரு ஓட்டமாகக் கணக்கிடப்படும்.

**عَنْ أَبِي هُرَيْرَةَ قَالَ أَقْبَلَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَدَخَلَ مَكَّةَ فَأَقْبَلَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ إِلَى الْحَجَرِ فَاسْتَلَمَهُ ثُمَّ طَافَ بِالْبَيْتِ ثُمَّ أَتَى الصَّفَا فَعَلاَهُ حَيْثُ يَنْظُرُ إِلَى الْبَيْتِ فَرَفَعَ يَدَيْهِ فَجَعَلَ يَذْكُرُ اللَّهَ مَا شَاءَ أَنْ يَذْكُرَهُ وَيَدْعُوهُ...**

**رواه ابو داود رقم الحديث1596**

இறைத்தூதர்(ஸல்) மக்காவில் நுழைந்ததும் ஹஜ்ருல் அஸ்வதுக்கு முன்பாக வந்து அதைத்தொட்டார்கள். பின்னர் தவாஃப் செய்தார்கள். பின்னர் ஸஃபா மர்வாவிற்கு வந்து அதன் மேல் ஏறி, அங்கிருந்து கஅபாவைப் நோக்கி தம் கைகளை உயர்த்தி அல்லாஹ்வை துதித்து பிரார்த்தனையும் செய்தார்கள்...

**அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)**

**நூல்: ஸஹீஹ் முஸ்லிம், அபூ தாவூத், ஹதீஸ் எண்: 1596**

**ثُمَّ خَرَجَ مِنَ الْبَابِ إِلَى الصَّفَا فَلَمَّا دَنَا مِنَ الصَّفَا قَرَأَ (إِنَّ الصَّفَا وَالْمَرْوَةَ مِنْ شَعَائِرِ اللَّهِ)« أَبْدَأُ بِمَا بَدَأَ اللَّهُ بِهِ ». فَبَدَأَ بِالصَّفَا فَرَقِىَ عَلَيْهِ حَتَّى رَأَى الْبَيْتَ فَاسْتَقْبَلَ الْقِبْلَةَ فَوَحَّدَ اللَّهَ وَكَبَّرَهُ وَقَالَ « لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَىْءٍ قَدِيرٌ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ أَنْجَزَ وَعْدَهُ وَنَصَرَ عَبْدَهُ وَهَزَمَ الأَحْزَابَ وَحْدَهُ ». ثُمَّ دَعَا بَيْنَ ذَلِكَ قَالَ مِثْلَ هَذَا ثَلاَثَ مَرَّاتٍ ثُمَّ نَزَلَ إِلَى الْمَرْوَةِ حَتَّى إِذَا انْصَبَّتْ قَدَمَاهُ فِى بَطْنِ الْوَادِى سَعَى حَتَّى إِذَا صَعِدَتَا مَشَى حَتَّى أَتَى الْمَرْوَةَ فَفَعَلَ عَلَى الْمَرْوَةِ كَمَا فَعَلَ عَلَى الصَّفَا رواه مسلم2127**

இறைத்தூதர்(ஸல்) ஸஃபாவை அடைந்ததும் நிச்சயமாக ஸஃபாவும் மர்வாவும் அல்லாஹ்வின் சின்னங்களாகும்... (திருக் குர்ஆன் 2:158) என ஓதினார்கள். பின்னர், "அல்லாஹ் எதை முதலில் கூறியுள்ளானோ அங்கிருந்தே ஆரம்பிக்கிறேன்"

*எனக் கூறிவிட்டு ஸஃபாவிலிருந்து ஆரம்பித்தார்கள். அதன் மேல் ஏறி கிப்லாவை முன்னோக்கி கஅபாவைப் பார்த்தவர்களாக,* ***"லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக்க லஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலா குல்லி ஷையின் கதீர். லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு அன்ஜஸ வஃதஹு வநஸர அப்தஹு வஹஸமல் அஹ்ஸாப வஹ்தஹு"*** *(பொருள்: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன்; அவனுக்கு இணை ஏதுமில்லை; ஆட்சி அதிகாரம் அவனுக்கே உரியன. புகழனைத்தும் அவனுக்கே உரியன; அவர் ஒவ்வொரு பொருளின் மீதும் ஆற்றல் மிக்கவன்; வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை; அவன் தனித்தவன்; அவன் தன் வாக்குறுதியை நிறைவேற்றினான்; அவன் தன் அடியாருக்கு உதவினான்; அவன் தனித்து நின்றே அனை வரையும் வெற்றி கண்டான்) என மூன்று தடவை கூறினார்கள். பின்னர் மர்வாவை நோக்கி இறங்கினார்கள். பத்னுல் வாதீ என்னும் இடத்தில் ஓடினார்கள். பிறகு மர்வா வரும் வரை நடந்தார்கள். பின்னர் ஸஃபாவில் செய்தது போலவே மர்வாவிலும் செய்தார்கள்.*

***அறிவித்தவர்: ஜாபிர்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் முஸ்லிம், ஹதீஸ் எண்: 2127***

**عن جَابِرُ بْنُ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّهُ حَـــجَّ مَـــعَ النَّبِـــيِّ صَـــلَّى اللَّـــهُ عَلَيْهِ وَسَـــــلَّمَ.. فَقَالَ رَسُوْلُ الله صلى الله عليه وسلم لَهُمْ أَحِلُّوا مِنْ إِحْرَامِكُمْ بِطَوَافِ الْبَيْتِ وَبَيْنَ الصَّـــفَا وَالْمَـــرْوَةِ وَقَصِّـــرُوا...**

**رواه البخاري رقم الحديث1568**

*"இறைஇல்லத்தை வலம் வாருங்கள்; ஸஃபா மர்வாவுக்கு இடையே ஸயீ செய்யுங்கள்; பிறகு முடியைக் குறைத்துக் கொள்ளுங்கள்; இஹ்ராமில் இருந்து விடுபடுங்கள்!" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.* ***அறிவித்தவர்: ஜாபிர்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1568***

*எனவே ஆண்கள் தங்களின் தலை முடியை பரவலாக குறைக்க வேண்டும். தலையின் எங்காவது ஓர் இடத்தில் சிறிது முடியை வெட்டுவது கூடாது. பெண்கள் தலையை மழிக்கக்கூடாது.*

عن ابْنَ عَبَّاسٍ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لَيْسَ عَلَى النِّسَاءِ حَلْقٌ إِنَّمَا عَلَى النِّسَاءِ التَّقْصِيرُ.

رواه ابو داود رقم الحديث1693

"தலையை மழித்துக் கொள்வது பெண்களுக்கு இல்லை. நிச்சயமாக முடியைக் குறைத்துக் கொள்வதே பெண்களுக்கான அனுமதியாகும்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)**
**நூல்: அபூ தாவூத், ஹதீஸ் எண்: 1693. தப்ரானி.**

عَنْ حَارِثَةَ بْنِ وَهْبٍ الْخُزَاعِيِّ رَضِي الله عَنْهم قَالَ صَلَّى بِنَا النَّبِيُّ صَلَّى الله عَلَيْهِ وَسَلَّمَ وَنَحْنُ أَكْثَرُ مَا كُنَّا قَطُّ وَآمَنُهُ بِمِنًى رَكْعَتَيْنِ رواه صحيح البخاري رقم الحديث1656

இறைத்தூதர்(ஸல்) மினாவில் எங்களுக்கு இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்தினார்கள். அந்நாளில் எப்போதுமில்லாத அளவுக்கு நாங்கள் அதிகமாகவும் இருந்தோம். எந்த அச்சமு மில்லாமலும் இருந்தோம்.

**அறிவித்தவர்: ஹாரிஸா இப்னு வஹ்பு(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1656**

# ஹஜ்ஜின் சட்டங்கள்

## தர்வியா நாள், துல் ஹஜ் 8

**عن ابن عباس قال صلى رسول الله صلى الله عليـــه و ســـلم الظهـــر يـــوم التروية والفجر يوم عرفـــة بمـــنى رواه أبـــو داود1632**

*தர்வியா நாளில் (துல்ஹஜ் 8 ஆம் நாள்) லுஹர் தொழுகையை யும், அரஃபா நாளின் (9ஆம் நாள்) ஃபஜ்ர் தொழுகையையும் இறைத்தூதர்(ஸல்) மினாவில் தொழுதார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)***

***நூல்: அபூ தாவூத் ஹதீஸ் எண்: 1632, அஹ்மத்***

**عَنْ جَابِرٍ قَالَ رَمَى رَسُولُ اللَّــــهِ –صلى الله عليه وســـلم– الْجَمْرَةَ يَوْمَ النَّحْرِ ضُحًى وَأَمَّا بَعْدُ فَإِذَا زَالَتِ الشَّـــمْسُ رواه مســـلم2290**

*துல் ஹஜ் பத்தாம் நாள் (யவ்முன்னஹ்ர்) அன்று லுஹர் நேரத்திலும், அதற்கடுத்த நாட்களில் சூரியன் உச்சி சாய்ந்த பின்னரும் இறைத்தூதர்(ஸல்) ஜம்ராவில் கல்லெறிந்தார்கள்.*

***அறிவித்தவர்: ஜாபிர்(ரலி)***

***நூல்: ஸஹீஹ் முஸ்லிம், ஹதீஸ் எண் 2290***

*துல்ஹஜ் 8ஆம் நாள் தர்வியா நாள் எனப்படும். இந்நாளில் லுஹர் தொழுகைக்குள் மினாவுக்கு சென்றுவிட வேண்டும். மினாவில் தங்கி இருக்கும்போது லுஹர், அஸர், இஷா ஆகிய நான்கு ரக்அத் தொழுகைகளை இரண்டிரண்டு ரக்அத்களாக அந்தந்த நேரத்தில் தொழவேண்டும். மினாவில் கஸர் (குறைத் தல்) தொழுகை மட்டும்தான். ஜம்வு (சேர்த்து) தொழுகை இல்லை. மேலும் 9ஆம் நாளின் ஃபஜ்ர் தொழுதுவிட்டு சூரியன் உதயமாகும்வரை தங்க வேண்டும். உதயத்திற்கு பிறகு அரஃபாவிற்குச் செல்ல வேண்டும்.*

## அரஃபா நாள், துல்ஹஜ் 9

**قَالَتْ عَائِشَةُ إِنَّ رَسُولَ اللَّهِ صلى الله عليه وسلم قَالَ مَا مِـــنْ يَـــوْمٍ**

أَكْثَرَ مِنْ أَنْ يُعْتِقَ اللَّهُ فِيهِ عَبْدًا مِنَ النَّارِ مِنْ يَوْمِ عَرَفَةَ وَإِنَّهُ لَيَدْنُو ثُمَّ يُبَاهِي بِهِمُ الْمَلاَئِكَةَ فَيَقُولُ مَا أَرَادَ هَؤُلاَءِ رواه مسلم

"அரஃபா நாளை விட வேறு எந்த நாளிலும் அல்லாஹ் அடியானை அதிகமாக நரகத்திலிருந்து விடுதலை செய்வதில்லை. (அந்நாளில்) அவன் நெருங்கி வந்து இந்த அடியார்கள் எதை விரும்புகிறார்கள்?" என வானவர்களிடம் கூறி பெரு மிதம் கொள்கிறான்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: ஆயிஷா(ரலி)**
**நூல்: ஸஹீஹ் முஸ்லிம், ஹதீஸ் எண்: 2402.**

عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ كَانَ يَقُولُ إِنَّ اللَّهَ عَزَّ وَجَلَّ يُبَاهِي مَلَائِكَتَهُ عَشِيَّةَ عَرَفَةَ بِأَهْلِ عَرَفَةَ فَيَقُولُ انْظُرُوا إِلَى عِبَادِي أَتَوْنِي شُعْثًا غُبْرًا

رواه ابو داود رقم الحديث6792

"அரஃபா பெருவெளியில் நிற்கும் மக்கள் குறித்து, பரட்டை தலையர்களாக புழுதி படிந்தவர்களாக நிற்கும் என் அடியார் களைப் பாருங்கள்!" என மகத்துவமும் கண்ணியமும் நிறைந்த அல்லாஹ் வானவர்களிடம் பெருமிதம் கொள்கிறான்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி அல் ஆஸ்(ரலி)**
**நூல்: அபூ தாவூத், ஹதீஸ் எண்: 6792**

عَنْ عَبْدِ الرَّحْمَنِ بْنِ يَعْمَرَ أَنَّ نَاسًا مِنْ أَهْلِ نَجْدٍ أَتَوْا رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَهُوَ بِعَرَفَةَ فَسَأَلُوهُ فَأَمَرَ مُنَادِيًا فَنَادَى الْحَجُّ عَرَفَةُ مَنْ جَاءَ لَيْلَةَ جَمْعٍ قَبْلَ طُلُوعِ الْفَجْرِ فَقَدْ أَدْرَكَ الْحَجَّ

رواه الترمذي رقم الحديث814ابن خزيمة و حاكم

"இறைத்தூதர்(ஸல்) அரஃபாவில் இருந்தபோது நஜ்து கூட்டத்தார் வந்து கேள்விகள் கேட்டார்கள். அப்போது, ஒன்று கூடும் நாளின் - 10ஆம் நாளின் ஃபஜ்ருக்கு முன் அரஃபாவிற்கு வந்துவிட்டவர் ஹஜ்ஜை அடைந்துவிட்டார்"

என அறிவிப்புச் செய்யுமாறு அறிவிப்புச் செய்பவருக்கு இறைத்தூதர்(ஸல்) கட்டளையிட்டார்கள்.

**அறிவித்தவர்: அப்துர் ரஹ்மான் இப்னு யஃமுர்(ரலி)**
**நூல்: திர்மிதீ, ஹதீஸ் எண்: 814, இப்னு குஜைமா மற்றும் ஹாகிம்**

عَنْ جَابِرٍ فِي حَدِيثِهِ ذَلِكَ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ نَحَرْتُ هَاهُنَا وَمِنًى كُلُّهَا مَنْحَرٌ فَانْحَرُوا فِي رِحَالِكُمْ وَوَقَفْتُ هَاهُنَا وَعَرَفَةُ كُلُّهَا مَوْقِفٌ وَوَقَفْتُ هَاهُنَا وَجَمْعٌ كُلُّهَا مَوْقِفٌ.

**رواه مسلم رقم الحديث2138**

“நான் இந்த இடத்தில் அறுத்துப் பலியிட்டேன்; மினா முழுவதும் அறுத்துப் பலியிடும் இடமாகும். எனவே நீங்கள் தங்கி இருக்கும் இடங்களிலேயே அறுத்துப் பலியிடுங்கள்! நான் இந்த இடத்தில் தங்கினேன்; அரஃபா முழுவதும் தங்குமிடமாகும். நான் இந்த இடத்தில் தங்கினேன்; ஒன்று கூடும் இடம் (முஸ்தலிஃபா) முழுக்க தங்கும் இடமாகும்” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: ஜாபிர்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் முஸ்லிம், ஹதீஸ் எண்: 2138. அபூ தாவூத்**



عن جابر رضي الله عنه أَذَّنَ بِلَالٌ ثُمَّ أَقَامَ فَصَلَّى الظُّهْرَ ثُمَّ أَقَامَ فَصَلَّى الْعَصْرَ وَلَمْ يُصَلِّ بَيْنَهُمَا شَيْئًا...

**رواه ابو داود رقم الحديث1628**

பிலால்(ரலி) ஒருமுறை பாங்கு சொன்னார். பிறகு இகாமத் சொன்னதும் இறைத்தூதர்(ஸல்) லுஹர் தொழ வைத்தார்கள். அதன் பிறகு பிலால்(ரலி) இகாமத் மட்டும் சொன்னதும் இறைத்தூதர்(ஸல்) அஸர் தொழவைத்தார்கள்.

**அறிவித்தவர்: ஜாபிர்(ரலி)**
**நூல்: அபூ தாவூத், ஹதீஸ் எண்: 1628**

عن جَابِرَ بْنَ عَبْدِ اللَّهِ قَالَ دَفَعَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ حَتَّى انْتَهَى إِلَى الْمُزْدَلِفَةِ فَصَلَّى بِهَا الْمَغْرِبَ وَالْعِشَاءَ بِأَذَانٍ وَإِقَامَتَيْنِ

وَلَمْ يُصَــلِّ بَيْنَهُمَــا شَــيْئًا.

**رواه النسائي رقم الحديث650**

சூரியன் மறைந்ததும் இறைத்தூதர்(ஸல்) முஸ்தலிஃபாவிற்குச் சென்று அங்கு ஒரு பாங்கு மற்றும் இரண்டு இகாமத்தில் மக்ரிப் தொழவைத்தார்கள். இவை இரண்டிற்கு இடையில் வேறு எந்தத் தொழுகையும் தொழவில்லை.

**அறிவித்தவர்: ஜாபிர்(ரலி)**
**நூல்: நஸாயீ, ஹதீஸ் எண்: 650**

عن أُسَامَةُ بْنُ زَيْدٍ قَالَ: كُنْتُ رَدِيفَ النَّبِيِّ صَــلَّى اللَّــهُ عَلَيْــهِ وَسَــلَّمَ بِعَرَفَاتٍ فَــرَفَعَ يَدَيْــهِ يَــدْعُو.

**رواه النسائي رقم الحديث2961**

அரஃபாவில் நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குப் பின்னால் ஒட்டகத்தின் மீது அமர்ந்திருந்தேன். அவர்கள் தம் கைகளை உயர்த்தி பிரார்த்தித்தார்கள்.

**அறிவித்தவர்: உஸாமா இப்னு ஸைத்(ரலி)**
**நூல்: நஸாயீ, ஹதீஸ் எண்: 2961**

ஹஜ் காரியங்களில் மிக முக்கியமானது அரஃபாவில் தங்குவது தான். அரஃபா பெருவழியில் குறிப்பிட்ட இடத்தில்தான் தங்கவேண்டும் என்பது அவசியமில்லை. அரஃபாவில் எந்த இடத்தில் வேண்டுமானாலும் தங்கலாம். அரஃபாவில் லுஹர், அஸர் தொழுகையை சேர்த்தும் குறைத்தும் (ஜம்வு கஸர்) தொழ வேண்டும். சூரியன் மறையும்வரை அங்கு தங்க வேண்டும். மக்ரிப் தொழுகையை அங்கு தொழக் கூடாது. அதிகமதிகம் அரஃபாவில் பிரார்த்தனையில் ஈடுபட வேண்டும். அரஃபா வில் தங்கி இருப்போர் அரஃபா நோன்பு நோற்கக் கூடாது. ஹஜ்ஜின் முக்கியக் கிரிகையே அரஃபாவில் தங்குவதுதான்.

## முஸ்தலிஃபா, துல் ஹஜ் - 9

சூரியன் மறையும்வரை இறைத்தூதர்(ஸல்) அரஃபாவில் தங்கினார்கள். சூரியன் மறைந்ததும் அங்கிருந்து புறப்பட்டு முஸ்தலிஃபாவிற்கு வந்தார்கள். ஒரு பாங்கு மற்றும் இரண்டு

இகாமத்தில் மக்ரிப் மற்றும் இஷா தொழுதார்கள். அவ்விரண்டிற்கு இடையே எதையும் தொழவில்லை. பிறகு ஃபஜ்ர் நேரம் வரும் வரை படுத்து உறங்கிவிட்டு ஃபஜ்ர் நேரம் வந்ததும் பாங்கு கூறி ஃபஜ்ர் தொழுதார்கள். பிறகு ஒட்டகத்தில் அமர்ந்து மஷ்அருல் ஹராமிற்கு வந்தார்கள். கிப்லாவை முன்னோக்கி தக்பீர் கூறி லாயிலாஹ இல்லல்லாஹ் என அல்லாஹ்வை ஒருமைப்படுத்தினார்கள். காலை நன்கு வெளுக்கிற வரை நின்றிருந்தார்கள். முஸ்தலிஃபா முழுவதும் நிற்கும் இடமாகும் என்றும் கூறினார்கள். இதற்கான அறிவிப்பு நீண்ட ஹதீஸாக முஸ்லிமில் பதிவாகியுள்ளது. அதன் சுருக்கம்தான் இங்கு தரப்பட்டுள்ளது.

அரஃபாவிலிருந்து சூரியன் மறைந்த பிறகு மக்ரிப் தொழாமல் முஸ்தலிஃபா வரவேண்டும். இங்கு மக்ரிப் மற்றும் இஷா தொழுகைகளை ஜம்வு கஸ்ராக தொழுதுவிட்டு ஃபஜ்ர் வரை தங்கவேண்டும். பத்தாம் நாளின் ஃபஜ்ர் தொழுகையை அங்கு தொழுதுவிட்டு சூரிய உதயத்திற்கு முன்பு கல்லெறியப் புறப்பட வேண்டும்.



**عَنْ عَائِشَةَ رَضِي الله عَنْهَا قَالَتْ نَزَلْنَا الْمُزْدَلِفَةَ فَاسْتَأْذَنَت النَّبِيَّ صَلَّى الله عَلَيْهِ وَسَلَّمَ سَوْدَةُ أَنْ تَدْفَعَ قَبْلَ حَطْمَةِ النَّاسِ وَكَانَتِ امْرَأَةً بَطِيئَةً فَأَذِنَ لَهَا فَدَفَعَتْ قَبْلَ حَطْمَةِ النَّاسِ وَأَقَمْنَا حَتَّى أَصْبَحْنَا نَحْنُ ثُمَّ دَفَعْنَا. بِدَفْعِهِ رواه صحيح البخاري رقم الحديث1681**

நாங்கள் முஸ்தலிஃபாவில் தங்கினோம். அப்போது ஸவ்தா (ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம், மக்கள் புறப்படுவதற்கு முன்பாக, தாம் அங்கிருந்து (மினாவுக்குப்) புறப்பட அனுமதி கேட்டார். ஏனெனில், அவர் மெதுவாக நடக்கக் கூடியவராக இருந்தார். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவருக்கு அனுமதி கொடுத்தார்கள். அவ்வாறே, மக்கள் அங்கிருந்து புறப்படும் முன் அவர் புறப்பட்டுவிட்டார். நாங்கள் மட்டும் ஸுப்ஹு வரை அங்கேயே தங்கிவிட்டு, பிறகு இறைத்தூதர்(ஸல்) அங்கிருந்து புறப்பட்டபோது நாங்களும் புறப்பட்டோம்...

**அறிவித்தவர்: ஆயிஷா(ரலி)**

**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 1681, முஸ்லிம்.**

عن ابْنَ عَبَّاسٍ رَضِي الله عَنْهمَا يَقُولُ أَنَا مِمَّنْ قَدَّمَ النَّبِـــيُّ صَــلَّى الله عَلَيْــهِ وَسَلَّمَ لَيْلَةَ الْمُزْدَلِفَةِ فِي ضَعَفَةِ أَهْلِهِ رواه صحيح البخاري رقم الحـــديث1678

*தம் குடும்பத்திலிருந்த பலவீனமானவர்களை இறைத்தூதர்(ஸல்) முஸ்தலிஃபாவிருந்து முன்கூட்டியே அனுப்பியவர்களில் நானும் இருந்தேன்.*

***அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 1678, திர்மிதீ***

## *யவ்முன் னஹ்ர் - துல் ஹஜ் 10*

عن جابر رضي الله عنه قال:...حَتَّى أَتَى الْجَمْرَةَ الَّتِي عِنْدَ الشَّـــجَرَةِ فَرَمَاهَـــا بِسَبْعِ حَصَيَاتٍ يُكَبِّرُ مَعَ كُلِّ حَصَـــاةٍ مِنْهَـــا

رواه مسلم رقم الحديث2137

*இறைத்தூதர்(ஸல்) முஸ்தலிஃபாவிலிருந்து புறப்பட்டு மரம் இருந்த ஜம்ரத் துல் அகபாவை அடைந்ததும் சுண்டி எறியும் ஏழு சிறு கற்களை எறிந்தார்கள். அவற்றின் ஒவ்வொரு கல்லுக்கும் தக்பீர் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: ஜாபிர்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் முஸ்லிம், ஹதீஸ் எண்: 2137***

عَنْ عَائِشَةَ قَالَتْ أَفَاضَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مِــنْ آخِــرِ يَوْمِــهِ حِينَ صَلَّى الظُّهْرَ ثُمَّ رَجَعَ إِلَى مِنًى فَمَكَــثَ بِهَــا لَيَــالِيَ أَيَّــامِ التَّشْــرِيقِ يَرْمِي الْجَمْرَةَ إِذَا زَالَتْ الشَّمْسُ كُلُّ جَمْرَةٍ بِسَبْعِ حَصَيَاتٍ يُكَبِّرُ مَــعَ كُــلِّ حَصَاةٍ وَيَقِفُ عِنْدَ الْــأُولَى وَالثَّانِيَــةِ فَيُطِيــلُ الْقِيَــامَ وَيَتَضَــرَّعُ وَيَــرْمِي الثَّالِثَةَ وَلَا يَقِــفُ عِنْــدَهَا.

رواه ابو داود رقم الحديث1683

*அந்த நாளின் கடைசிப் பகுதியில் லுஹர் தொழும் நேரத்தில் இறைத்தூதர்(ஸல்) இஃபாளா செய்தார்கள். பின்னர் மினாவுக்கு திருபினார்கள். அய்யாமுத் தஷ்ரீக் நாட்களில் அங்கேயே தங்கினார்கள். ஒவ்வொரு நாளும் சூரியன் அடிசாய்ந்ததும்*

ஒவ்வொரு ஜம்ராவையும் ஏழு கற்கள் வீதம் ஒவ்வொரு கல்லுக்கும் தக்பீர் கூறிக்கொண்டே எறிந்தார்கள். முதல் ஜம்ராவில் சிறிது நேரம் நின்றார்கள். இரண்டாவது ஜம்ராவில் அதிக நேரம் நின்றார்கள். பின்னர் மூன்றாம் ஜம்ராவில் அமைதியாக கல்லெறிந்தார்கள். அங்கு நிற்கவில்லை.

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி)***
***நூல்: அபூ தாவூத், ஹதீஸ் எண்: 1683.***

**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ قَالَ لَمَّا رَمَى رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ الْجَمْرَةَ وَنَحَرَ نُسُكَهُ وَحَلَقَ نَاوَلَ الْحَالِقَ شِقَّهُ الْأَيْمَنَ فَحَلَقَهُ ثُمَّ دَعَا أَبَا طَلْحَةَ الْأَنْصَارِيَّ فَأَعْطَاهُ إِيَّاهُ ثُمَّ نَاوَلَهُ الشِّقَّ الْأَيْسَرَ فَقَالَ احْلِقْ فَحَلَقَهُ فَأَعْطَاهُ أَبَا طَلْحَةَ فَقَالَ اقْسِمْهُ بَيْنَ النَّاسِ.**

**رواه مسلم رقم الحديث 2300**

இறைத்தூதர்(ஸல்) மினாவிற்கு வந்து ஜம்ரத்துல் அகபாவை நோக்கி கல்லெறிந்தார்கள். பிறகு தம் தங்குமிடம் வந்து ஒட்டகத்தை அறுத்தார்கள். பின்னர் மழிக்கக்கூடியவரிடம் தம் வலப் பக்கத்தையும் சுட்டிக் காண்பித்து அகற்றச் செய்தார்கள். பின்னர் அபூ தல்ஹா அல் அன்ஸாரியை அழைத்து அதை அவர்களிடம் கொடுத்தார்கள். மக்களிடையே பிரித்துக் கொடுக்கச் சொன்னார்கள். பின்னர் முன்பு மழித்தவரிடமே தம் இடப் பக்கத்தைக் காண்பித்து அகற்றுவீராக எனக் கூறினார்கள். அவர் அகற்றியதும் அதை அபூ தல்ஹாவிடம் கொடுத்து மக்களிடம் பங்கிட்டுக் கொடுக்குமாறு கூறினார்கள்.

***அறிவித்தவர்: அனஸ்(ரலி)***
***நூல்: அஹ்மத், முஸ்லிம், ஹதீஸ் எண்: 2300. அபூ தாவூத்.***

**عَنْ عَبْدِاللَّهِ بْنِ عُمَرَ رَضِي الله عَنْهمَا أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى الله عَلَيْهِ وَسَلَّمَ قَالَ اللَّهُمَّ ارْحَمِ الْمُحَلِّقِينَ قَالُوا وَالْمُقَصِّرِينَ يَا رَسُولَ اللَّهِ قَالَ اللَّهُمَّ ارْحَمِ الْمُحَلِّقِينَ قَالُوا وَالْمُقَصِّرِينَ يَا رَسُولَ اللَّهِ قَالَ وَالْمُقَصِّرِينَ وَقَالَ اللَّيْثُ حَدَّثَنِي نَافِعٌ رَحِمَ اللَّهُ الْمُحَلِّقِينَ مَرَّةً أَوْ مَرَّتَيْنِ قَالَ وَقَالَ**

عُبَيْدُاللَّـــــهِ حَـــــدَّثَنِي نَـــافِعٌ وَقَـــالَ فِـــي الرَّابِعَـــةِ وَالْمُقَصِّـــرِينَ.

**رواه صحيح البخاري رقم الحـــديث1612**

இறைத்தூதர்(ஸல்) தம் ஹஜ்ஜின்போது தலைமுடியை மழித்தார்கள். இறைவா தலைமுடியை மழித்துக் கொள்பவருக்கு நீ அருள் புரிவாயாக" எனப் பிராத்தித்தார்கள். இறைத்தூதர் அவர்களே முடியைக் குறைத்துக் கொள்பவர்களுக்கும்" என தோழர்கள் கேட்டார்கள். பின்னர், இறைவா தலைமுடியை மழித்துக் கொள்பவருக்கு நீ அருள் புரிவாயாக" எனப் பிராத்தித்தார்கள். இறைத்தூதர் அவர்களே முடியைக் குறைத்துக் கொள்பவர்களுக்கும்" என தோழர்கள் மீண்டும் கேட்டார்கள். முடியைக் குறைத்துக் கொள்பவர்களுக்கும்" என இறைத் தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: இப்னு உமர்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1612**

சூரியன் உதிப்பதற்கு முன்னதாக முஸ்தலிஃபாவிலிருந்து மினாவுக்கு புறப்பட்டுச் செல்லவேண்டும். பலவீனமானவர்கள், பெண்கள் ஆகியோர் இரவிலேயே மினாவிற்குச் செல்லலாம். இரவு மினாவிற்கு சென்றவர்கள் சூரிய உதயத்திற்கு முன் கல்லெறிதல் கூடாது. ஏழு சிறிய கற்களை எடுத்துக் கொண்டு ஜம்ரத்துல் அகபாவை நோக்கி எறியவேண்டும். ஒவ்வொரு கல்லை எறியும்போதும் "அல்லாஹு அக்பர்" என தக்பீர் கூறவேண்டும். பின்னர் குர்பான் கொடுக்க வேண்டும்; பின்னர் முடியை மழிக்க வேண்டும்.



عَنْ عَبْدِاللَّهِ بْنِ عَمْرٍو أَنَّ رَسُـــولَ اللَّـــهِ صَـــلَّى الله عَلَيْـــهِ وَسَـــلَّمَ وَقَـــفَ فِي حَجَّةِ الْوَدَاعِ فَجَعَلُوا يَسْـــأَلُونَهُ فَقَـــالَ رَجُـــلٌ لَـــمْ أَشْـــعُرْ فَحَلَقْـــتُ قَبْلَ أَنْ أَذْبَحَ قَالَ اذْبَحْ وَلَا حَرَجَ فَجَاءَ آخَـــرُ فَقَـــالَ لَـــمْ أَشْـــعُرْ فَنَحَـــرْتُ قَبْلَ أَنْ أَرْمِيَ قَالَ ارْمِ وَلَا حَرَجَ فَمَا سُئِلَ يَوْمَئِذٍ عَنْ شَـــيْءٍ قُـــدِّمَ وَلَـــا أُخِّـــرَ إِلَّا قَالَ افْعَلْ وَلَا حَرَجَ **رواه صحيح البخاري رقم الحـــديث1736**

இறைத்தூதர்(ஸல்) விடைபெறும் ஹஜ்ஜின்போது (தம் வாகனத்தின் மீது) அமர்ந்திருந்தார்கள். அப்போது மக்கள் அவர்களிடம் (சில சந்தேகங்களை) கேட்கத் தொடங்கினர்.

ஒருவர், 'நான் பலியிடுவதற்கு முன்பாக, அறியாமல் தலையை மழித்து விட்டேன்!" என்றார்.

"குற்றமில்லை! (இப்போது பலிப்பிராணியை) அறுப்பீராக!" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

பிறகு இன்னொருவர் வந்து "கல்லெறிவதற்கு முன்பு அறியாமை யினால் அறுத்து பலியிட்டுவிட்டேன்" எனக் கூறினார்.

"குற்றமில்லை! இப்போது கல்லெறிவீராக!" எனக் கூறினார்கள்.

அன்றைய தினம் (பிற்படுத்திச் செய்யப்பட வேண்டிய) சில வழி பாடுகள் முன்னதாகச் செய்யப்பட்டுவிட்டதாகவும் (முன்ன தாகச் செய்யப்படவேண்டிய) சில வழிபாடுகள் பிற்படுத்திச் செய்யப்பட்டுவிட்டதாகவும் கேட்கப்பட்ட அனைத்திற்கும் இறைத்தூதர்(ஸல்) 'குற்றமில்லை! (விடுபட்டத்தைச்) செய் வீராக!" என்றே கூறினார்கள்.

**அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதிஸ் எண்: 1736**

மினாவில் 10ஆம் நாள் செய்யவேண்டிய காரியங்களை முன்பின் செய்வதால் தவறு ஏதுமில்லை என்பதை இதன் மூலம் அறியலாம்.



عَنِ ابْنِ عَبَّاسٍ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ إِذَا رَمَيْتُمْ الْجَمْرَةَ فَقَدْ حَلَّ لَكُمْ كُلُّ شَيْءٍ إِلَّا النِّسَاءَ.

رواه أحمد 1986

''நீங்கள் அகபாவில் கல்லெறிந்துவிட்டால் பெண்களைத் தவிர மற்ற அனைத்தும் உங்களுக்கு ஹலால் ஆகும் என இறைத் தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)**
**நீநீல்: அஹ்மத், ஹதீஸ் எண்: 1986.**

இதே கருத்தில் இப்னு மாஜா, இப்னு குஜைமா, பைஹகீ மற்றும் தார குத்னீ ஆகிய நூல்களில் ஹதீஸ்கள் உள்ளன.

عن ابْنَ عَبَّاسٍ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لَيْسَ عَلَى

النِّسَاءِ حَلْقٌ إِنَّمَا عَلَـــى النِّسَـــاءِ التَّقْصِـــيرُ.

**رواه الدارمي رقم الحديث 1826**

*“தலையை மழித்துக் கொள்ள பெண்களுக்கு அனுமதி கிடையாது. குறைத்துக் கொள்வதே அவர்களுக்கு அனுமதியாகும்” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)***
***நூல்: தாரமீ, ஹதீஸ் எண்: 1826.***

*இதே கருத்தில் முஸ்லிம், அஹ்மத், திர்மிதீ மற்றும் நஸாயீ ஆகிய நூல்களில் ஹதீஸ்கள் உள்ளன.*

عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا زَوْجِ النَّبِيِّ صَـــلَّى اللَّـــهُ عَلَيْـــهِ وَسَـــلَّمَ قَالَـــتْ كُنْتُ أُطَيِّبُ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لِإِحْرَامِـــهِ حِـــينَ يُحْـــرِمُ وَلِحِلِّهِ قَبْـــلَ أَنْ يَطُـــوفَ بِالْبَيْـــتِ.

**رواه البخاري رقـــم الحـــديث 1539**

*இறைத்தூதர்(ஸல்) இஹ்ராம் அணிந்த நேரத்தில், அவர்கள் இஹ்ராம் அணிவதற்காக நான் நறுமணம் பூசிவிட்டேன். இதுபோல் இஹ்ராமிலிருந்து அவர்கள் விடுபட்டபோதும் (பத்தாம் நாள்) கஅபாவை வலம் வருவதற்கு முன்னர் அவர்களுக்கு நான் நறுமணம் பூசிவிட்டேன்.*

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1539***

عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ خَرَجْنَا مَـــعَ رَسُـــولِ اللَّـــهِ صَـــلَّى اللَّـــهُ عَلَيْهِ وَسَلَّمَ فَمِنَّا مَنْ أَهَلَّ بِعُمْرَةٍ وَمِنَّا مَنْ أَهَـــلَّ بِحَجَّـــةٍ وَمِنَّـــا مَـــنْ أَهَـــلَّ بِحَجٍّ وَعُمْرَةٍ وَأَهَلَّ رَسُولُ اللَّهِ صَـــلَّى اللَّـــهُ عَلَيْـــهِ وَسَـــلَّمَ بِـــالْحَجِّ فَأَمَّـــا مَنْ أَهَلَّ بِالْحَجِّ أَوْ جَمَعَ .الْحَجَّ وَالْعُمْرَةَ فَلَمْ يَحِلُّـــوا حَتَّـــى يَـــوْمِ النَّحْـــرِ.

**رواه البخاري رقـــم الحـــديث 4408**

*நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் (‘விடைபெறும்’ ஹஜ்ஜின் போது) புறப்பட்டோம். எங்களில் உம்ராவுக்காக*

*இஹ்ராம் கட்டியவர்களும் இருந்தனர்; ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டியவர்களும் இருந்தனர். இறைத்தூதர்(ஸல்) ஹஜ்ஜுக் காக இஹ்ராம் கட்டியிருந்தார்கள். ஹஜ் மற்றும் உம்ரா இரண்டிற்காகவும் சேர்த்து இஹ்ராம் கட்டியிருந்தவர்களும் நஹ்ருடைய (துல்ஹஜ் 10ஆம்) நாள் வரை இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை.*

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 4408, முஸ்லிம்.***

## தவாஃபுல் இஃபாளா

عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَبَّاسٍ أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لَمْ يَرْمُلْ فِي السَّبْعِ الَّذِي أَفَاضَ فِيهِ قَالَ عَطَاءٌ وَلَا رَمَلَ فِيهِ.

**رواه ابن ماجة رقم الحديث 3051**



*தவாஃபுல் இஃபாளா செய்தபோது இறைத்தூதர்(ஸல்) ஏழு சுற்றுக்களிலும் ஓடவில்லை.*

***அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)***

***நூல்: அபூ தாவூத், நஸாயீ***

*இதே கருத்தில் ஹாகிம், அபூ தாவூத், இப்னு மாஜா, நஸாயீ மற்றும் பைஹகீயில் ஹதீஸ்கள் உள்ளன.*

*10 ஆம் நாளன்று மினாவில் ஜம்ரத்துல் அகபாவில் கல்லெறிந்து விட்டு குர்பானியும் கொடுத்து தலையை மழித்த பின்னர் மக்காவிற்குப் புறப்பட்டு மீண்டும் தவாஃப் செய்ய வேண்டும். இது தவாஃபுல் இஃபாளா எனப்படும். இந்த தவாஃபிற்கு வலது தோள்புஜம் திறந்திருக்க வேண்டியதில்லை. ஓட்டமும் இல்லை. இதற்குப் பின்னர் மினாவிற்குத் திரும்ப வேண்டும்.*

## அய்யாமுத் தஷ்ரீக் துல் ஹஜ் 11,12,13

عَنْ عَائِشَةَ قَالَتْ أَفَاضَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مِنْ آخِرِ يَوْمِهِ حِينَ صَلَّى الظُّهْرَ ثُمَّ رَجَعَ إِلَى مِنًى فَمَكَثَ بِهَا لَيَالِيَ أَيَّامِ التَّشْرِيقِ يَرْمِي الْجَمْرَةَ إِذَا زَالَتْ الشَّمْسُ كُلُّ جَمْرَةٍ بِسَبْعِ حَصَيَاتٍ يُكَبِّرُ مَعَ كُلِّ حَصَاةٍ وَيَقِفُ عِنْدَ الْأُولَى وَالثَّانِيَةِ فَيُطِيلُ الْقِيَامَ وَيَتَضَرَّعُ وَيَرْمِي

الثَّالِثَةَ وَلَا يَقِفُ عِنْدَهَا.

رواه ابو داود رقم الحديث 1683

*அந்நாளின் கடைசிப் பகுதியில் லுஹர் தொழும் நேரத்தில் இறைத்தூதர்(ஸல்) இஃபாளா செய்தார்கள். பின்னர் மினாவுக்கு திருபினார்கள். அய்யாமுத் தஷ்ரீக் நாட்களில் அங்கேயே தங்கினார்கள். ஒவொவரு நாளும் சூரியன் அடிசாய்ந்ததும் ஒவ்வொரு ஜம்ராவையும் ஏழு கற்கள் வீதம் ஒவ்வொரு கல்லுக்கும் தக்பீர் கூறிக்கொண்டே எறிந்தார்கள். முதல் ஜம்ராவில் சிறிது நேரம் நின்றார்கள். இரண்டாவது ஜம்ராவில் அதிக நேரம் நின்றார்கள். பின்னர் மூன்றாம் ஜம்ராவில் அமைதியாக கல்லெறிந்தார்கள். அங்கு நிற்கவில்லை.*

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி)***
***நூல்: அபூ தாவூத், ஹதீஸ் எண்: 1683.***

*இதே கருத்தில் இப்னு மாஜா, நஸாயீ மற்றும் பைஹகீயில் ஹதீஸ்கள் உள்ளன.*

عن ابن عمر رضي الله عنه قال كُنَّا نَتَحَيَّنُ فَإِذَا زَالَتْ الشَّمْسُ رَمَيْنَا

رواه البخاري رقم الحديث 1628

*நாங்கள் நேரத்தைக் கணக்கிட்டுக் கொண்டிருப்போம். சூரியன் உச்சி சாய்ந்தபின்னர் கல்லெறிவோம்.*

***அறிவித்தவர்: இப்னு உமர்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1628.***

وَاذْكُرُوا اللهَ فِيْ أَيَّامٍ مَّعْدُوْدَاتٍ فَمَنْ تَعَجَّلَ فِيْ يَوْمَيْنِ فَلاَ إِثْمَ عَلَيْهِ وَمَنْ تَأَخَّرَ فَلاَ إِثْمَ عَلَيْهِ.

*குறிப்பிடப்பட்ட நாட்களில் அல்லாஹ்வை நினைவுகூருங்கள். (மினா விலிருந்து) இரண்டு நாட்களில் விரைந்து விட்டவரின் மீதும் குற்றமில்லை. தாமதித்தவரின் மீதும் குற்றமில்லை...*

***திருக்குர்ஆன் 2:203***

*துல் ஹஜ் 11,12,13 ஆகிய மூன்று நாட்கள் கல்லெறிய வேண்டிய நாட்கள். ஒருவர் விரும்பினால் 11,12 ஆகிய இரண்டு நாட்கள்*

மட்டும் கல்லெறிந்துவிட்டுத் திரும்பிவிடலாம். அவர் 12ஆம் நாள் மக்ரிப் தொழுகைக்கு முன்னதாக மினாவைவிட்டு வெளி யேறிவிட வேண்டும். தவறினால் 13ஆம் நாள் கல்லெறிந்து விட்டுத்தான் வெளியேற வேண்டும். தினமும் சூரியன் உச்சி சாய்ந்ததிலிருந்து கல்லெறிய வேண்டும். ஒவ்வொரு ஜம்ராவி லும் ஏழு கற்கள் வீதம் 21 கற்கள் எறியவேண்டும். ஒவ்வொரு கல்லை எறியும்போதும் தக்பீர் கூறவேண்டும்.

## தவாஃபுல் விதாஃ

عَنْ ابْنِ عَبَّاسٍ قَالَ كَانَ النَّاسُ يَنْصَرِفُونَ فِي كُلِّ وَجْهٍ فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لَا يَنْفِرَنَّ أَحَدٌ حَتَّى يَكُونَ آخِرُ عَهْدِهِ بِالْبَيْتِ.

رواه مسلم رقم الحديث 2350

மக்கள் பல திசைகளிலும் புறப்பட்டுச் செல்லத் தொடங்கினர். அப்போது, ‘‘கடைசிக் கிரியையாகிய பைத்துல்லாஹ்வில் தவாஃபுல் விதாஃ செய்யாமல் யாரும் விரையவேண்டாம்’’ என இறைத் தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் முஸ்லிம், ஹதீஸ் எண்: 2350.**

عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ أُمِرَ النَّاسُ أَنْ يَكُونَ آخِرُ عَهْدِهِمْ بِالْبَيْتِ إِلَّا أَنَّهُ خُفِّفَ عَنْ الْحَائِضِ

رواه البخاري رقم الحديث 1755

இறையில்லம் கஅபாவை தவாஃப் செய்வதை ஹஜ்ஜின் கடைசி வழிபாடாய் ஆக்கிக் கொள்ள வேண்டும் என மக்கள் கட்டளையிடப்பட்டுள்ளனர். ஆயினும் மாதவிடாய்ப் பெண் களுக்கு மட்டும் அதில் சலுகை வழங்கப்பட்டுள்ளது. (கடைசி தவாஃபான தவாஃபுல் விதாஃவை மட்டும் விட்டுவிட அனுமதி வழங்கப்பட்டுள்ளது).

**அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1755**

விடைபெற்றுச் செல்லும்போது இந்த தவாஃப் செய்யப்படுவ தால் தவாஃபுல் விதாஃ எனக் கூறப்படுகிறது. விதாஃ என்பதற்கு

விடைபெறுதல் என்று பொருள். இது மாதவிலக்கான பெண்களுக்கு கட்டாயமல்ல. இந்த தவாஃபோடு ஹஜ்ஜின் அனைத்துக் காரியங்களும் முழுமையடைந்துவிடுகிறது.

இறைவனும் அவனுடைய தூதரும் காட்டித் தந்த வழியில் உங்களின் ஹஜ் அமைந்து அதற்குரிய கூலியை நீங்கள் மறுமையிலும் பெற்றிட இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

## மனனம் செய்யவேண்டியவை

## தல்பியா

لَبَّيْكَ اللَّهُمَّ لَبَّيْكَ لَبَّيْكَ لَا شَرِيكَ لَكَ لَبَّيْكَ إِنَّ الْحَمْدَ وَالنِّعْمَةَ لَكَ وَالْمُلْكَ لَا شَرِيكَ لَكَ

***லப்பைக் அல்லாஹுஃம்ம லப்பைக்; லப்பைக் லா ஷரீக்க லக்க லப்பைக்; இன்னல் ஹம்த வன்னிஃமத்த லக்க வல் முல்க் லா ஷரீக்க லக்.***

**பொருள்:** வந்துவிட்டேன் இறைவா உன்னிடமே வந்துவிட்டேன். உன்னிடமே வந்துவிட்டேன். உனக்கு யாதொரு இணையுமில்லை. உன்னிடமே வந்துவிட்டேன். நிச்சயமாக புகழும், அருட்பாக்கியங்களும், ஆட்சியும் உனக்கே உரியன. உனக்கு யாதொரு இணையுமில்லை.

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1448. ஸஹீஹ் முஸ்லிம்***

## தவாஃபில்... ருக்னுல் யமானியிலிருந்து அஸ்வத் கல்வரை

رَبَّنَا آتِنَا فِي الدُّنْيَا حَسَنَةً وَّفِي الآخِرَةِ حَسَنَةً وَّقِنَا عَذَابَ النَّارِ.

***ரப்பனா ஆத்தினா ஃபித்துன்யா ஹஸனத்தவ் வஃபில் ஆகிரத்தி ஹஸனத்தவ் வக்கினா அதாபன்னார்.***

**பொருள்:** எங்கள் இறைவா இவ்வுலகில் எங்களுக்கு நற்பாக்கியங்களை வழங்குவாயாக! மறுமையிலும் நற்பாக்கியங்களை வழங்கு வாயாக! இன்னும் எங்களை (நரக) நெருப்பின் வேதனை யிலிருந்தும் காத்தருள்வாயாக!

***திருக்குர்ஆன் 2:201***

## ஸஃபா மர்வாவில் கூறவேண்டியவை

لَا إِلَهَ إِلَّا اللَّهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ لَا إِلَهَ إِلَّا اللَّهُ وَحْدَهُ أَنْجَزَ وَعْدَهُ وَنَصَرَ عَبْدَهُ وَهَزَمَ الْأَحْزَابَ وَحْدَهُ.

***லாயிலாஹ இல்லல்லாஹுஃ வய்தஹுஃ லா ஷரீக்க லஹுஃ லஹுஃல் முல்க்கு வலஹுஃல் ஹம்து வஹுஃவ அலா குல்லி***

***ஷய்யின் கதீர். லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு அன்ஜஸ வஃதஹு வ நஸர அப்தஹு வ ஹஸமல் அஹ்ஸாப வஹ்தஹ்.***

**பொருள்:** *அல்லாஹ்வைத் தவிர வேறு கடவுள் இல்லை; அவன் தனித்த வன்; அவனுக்கு இணையாய் எதுவுமில்லை; ஆட்சி அவனுக்கு உரியது; புகழும் அவனுக்கு உரியது; அவன் ஒவ்வொரு பொருளின் மீதும் ஆற்றல் மிக்கவன். அல்லாஹ் வைத் தவிர வேறு கடவுள் இல்லை. அவன் தனித்தவன்; அவன் தன் வாக்கை நிறைவேற்றினான்; தன் அடியாருக்கு உதவினான். அவன் தனித்தவனாக எதிரிப்படையினைத் தோற்கடித்தான்.*

**நூல்: ஸஹீஹ் முஸ்லிம்**

## மஸ்ஜிதில் நுழையும்போது...

**اللــــهُم افتـــح لي ابـــوابَ رَحْمَتـــكَ**

***அல்லாஹும் மஃப்தஹ்லீ அப்வாப ரஹ்மதி(க்)க.***

**பொருள்:** *இறைவா! உன் அருள் வாயல்களை எனக்காக திறப்பாயாக!*

**நூல்: ஸஹீஹ் முஸ்லிம், இப்னு மாஜா**

## மஸ்ஜிதிலிருந்து வெளியேறுகிறபோது...

**اللهم إني أسألك مـــن فضـــلك**

***அல்லாஹும்ம இன்னீ அஸ்அலு(க்)க மின் ஃபள்லி(க்)க***

**பொருள்:** *இறைவா! உன்னுடைய பேரருளிலிருந்து உன்னிடம் கேட்கிறேன்.*

**நூல்: இப்னு மாஜா.**

## ஜனாஸா தொழுகையில்...

**اللَّهُمَّ اغْفِرْ لَهُ وَارْحَمْهُ وَعَافِهِ وَاعْفُ عَنْهُ وَأَكْــرِمْ نُزُلَــهُ وَوَسِّــعْ مُدْخَلَــهُ وَاغْسِلْهُ بِالْمَاءِ وَالثَّلْجِ وَالْبَــرَدِ وَنَقِّــهِ مِــنْ الْخَطَايَــا كَمَــا نَقَّيْــتَ الثَّــوْبَ الْأَبْيَضَ مِنْ الدَّنَسِ وَأَبْدِلْهُ دَارًا خَيْرًا مِنْ دَارِهِ وَأَهْلًا خَيْرًا مِــنْ أَهْلِــهِ وَزَوْجًــا**

خَيْرًا مِنْ زَوْجِهِ وَأَدْخِلْهُ الْجَنَّةَ وَأَعِذْهُ مِنْ عَذَابِ الْقَبْرِ أَوْ مِـــنْ عَـــذَابِ النَّـــارِ

***அல்லாஹும்ம மஃபிர் ஃபிர்லஹு, வர்ஹம்ஹு, வ ஆஃபிஹி, வஃ ஃபு அன்ஹு, வ அக்ரிம் நுஜுலஹு, வ வஸ்ஸிஃ முத்கலஹு, வ ஃக்ஸில்ஸு பில் மாயி, வஸ் ஸல்ஜி, வல் பரதி, வ நக்கிஹி மினல் கதாயா கமா நக்கைத்தஸ் ஸவ்பல் அப்யள மினத் தனஸி, வ அப்தில்ஹு தாரன் கைரன் மின் தாரிஹி, வ அஹ்லன் கைரன் மின் அஹ்லிஹி, வஜவ்ஜன் கைரன் மின் ஜவ்ஜிஹி, வ அத்கில்ஹுல் ஜன்னத்த, வ அயித்ஹு மின் அதாபில் கப்ரி வ அதாபின் னார்.***

*பொருள்: இறைவா! அவரின் பாவத்தைப் பொருப்பாயாக! அவருக்கு அருளும் செய்வாயாக! சுகத்தையும்! வழங்குவாயாக! அவரை மன்னித்தும் விடுவாயாக! அவருடைய தங்குதலை கண்ணியப்படுத்தவும் செய்வாயாக! அவரின் நுழைவிடத்தை விசாலமாக்கியும் தருவாயாக! தண்ணீர், பனிக்கட்டி, ஆலங்கட்டி ஆகியவற்றைக் கொண்டு அவரைக் கழுவவும் செய்வாயாக! அழுக்கிலிருந்து மிக்க வெண்மையான ஆடையை நீ சுத்தம் செய்தது போல பாவங்களிலிருந்து அவரைப் பரிசுத்தப்படுத்துவாயாக! அவரின் வீட்டை விட மிகச் சிறந்த ஒரு வீட்டை, அவரின் குடும்பத்தினரை விடவும் மிகச் சிறந்த குடும்பத்தினரை, அவரின் மனைவியை விட மிகச் சிறந்த மனைவியையும் அவருக்கு நீ மாற்றித் தருவாயாக! இன்னும் அவரை சுவனத்தில் நுழையச் செய்து, கப்ரின் வேதனையில் இருந்தும் நரக வேதனையிலிருந்தும் அவரைக் காத்தருள்வாயாக!*

**நூல்: ஸஹீஹ் முஸ்லிம்**

# ஹஜ்ஜை நிறைவேற்றும் முறை

## புறப்படுதல்

1. வீட்டிலிருந்து ஹஜ்ஜுக்காகப் புறப்படும்போது அதற்கென தனிப்பட்ட விருந்து உபசரிப்புகள், ஆடம்பரம், கூட்டத்தைக் கூட்டுதல் போன்ற செயல்கள் கூடாது. தனிப்பட்ட முறையில் உறவினர்கள் மற்றும் நண்பர்களிடம் தனக்காக அல்லாஹ் விடம் துஆ செய்ய வேண்டுவதில் தவறில்லை. அவ்வாறே நாம் யாருக்கேனும் கெடுதி எதுவும் செய்திருந்தால் அதற்காக அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்வதும் நல்லது.

## உம்ரா

2. பொதுவாக ஹஜ் மற்றும் உம்ரா செல்லும் அனைவரும் விமானம் ஏறும்போதே இஹ்ராம் ஆடை அணிந்து கொள்வது வழக்கம். காரணம் நாம் விமானப் பயணத்தில் **'யலம்லம்'** என்னும் இஹ்ராமின் எல்லையைக் கடக்கும்போது நிய்யத் மற்றும் தல்பியா சொல்லிக் கொள்வதற்கு இது இலகுவாக இருக்கும்.

3. மக்கா மாநகரில் நாம் நுழைந்ததும் நமக்கென ஒதுக்கப் பட்டுள்ள இடம் சென்று நம் சுய தேவைகளைப் போக்கிவிட்டு கஅபாவிற்கு வரவேண்டும்.

4. உளூ செய்து விட்டு கஅபாவில் நுழைந்ததும் ஹஜருல் அஸ்வத் கல்லின் மூலையிலிருந்து தவாஃபுல் குதூம் செய்யத் தொடங்கவேண்டும். முதல் மூன்று சுற்றுக்களில் வேகமாகவும், அதன் பின்னர் வரும் நான்கு சுற்றுக்களில் மெதுவாகவும் சுற்றுவது சுன்னா ஆகும். ஹஜ்ருல் அஸ்வத் கல்லுக்கு அருகில் வந்ததும் முடிந்தால் அதைத் தொட்டு முத்தமிடவேண்டும். அல்லது கையால் சைகை செய்து முத்தமிடவேண்டும். ஹஜருல் அஸ்வத் கல்லின் அருகே தவாஃபை ஆரம்பித்தது போன்று அங்கேயே தவாஃபை முடிக்கவேண்டும். தவாஃபின் இடையில் உங்களின் தேவையை குறித்து இறைவனிடம் முறையிடுங்கள்.

5. அதன் பின்னர் மகாமு இப்ராஹீமில் அல்லது கஅபாவின் ஒரு பகுதியில் இரண்டு ரக்அத்துக்கள் தொழவேண்டும்.

6. அதன் பின்னர் ஜம்ஜம் தண்ணீரை இயன்ற அளவு நன்றாக அருந்திக் கொள்ளவேண்டும். அந்த நேரத்தில் உங்களின் தேவையை இறைவனிடம் முறையிடுங்கள்.

7. அதன் பின்னர் ஸஃபா மற்றும் மர்வாவுக்கு இடையில் ஏழு முறை ஸயீ செய்ய வேண்டும். ஸஃபாவில் ஆரம்பித்து மர்வாவில் முடித்தால் அதை ஒரு ஸயீ எனக் கணக்கிட வேண்டும். பின்னர் மர்வாவிலிருந்து ஸஃபா வந்தால் அதை இரண்டாவது ஸயீ எனக் கணக்கிட வேண்டும். மர்வாவில் தான் ஸயீ முடிவடையும். ஸயீ செய்யும்போது பச்சை விளக்கு ஒளிரும் இடத்தில் ஆண்கள் மட்டும் மெதுவாக ஓட வேண்டும்.

8. ஸயீ முடித்த பின்னர் வெளியில் வந்து தலையை மழித்துக் கொள்ளுதல் அல்லது முடியை பரவலாகக் குறைத்துக் கொள்ளுதல் வேண்டும். இத்துடன் இஹ்ராம் களையப்பட்டு நாம் சாதாரன நிலைக்கு வந்துவிடலாம். மேற்கண்டவாறு செயல்படுவதுதான் உம்ரா எனப்படும்.



## ஹஜ்

9. துல் ஹஜ் மாதம் 8 ஆம் நாள் ஹஜ் கடமையை நிறை வேற்றுவதற்காக இஹ்ராம் அணியவேண்டும். இஹ்ராம் அணிவதற்கு முன்னர் குளித்துக் கொள்ள வேண்டும். நறுமணம் பூசிக் கொண்டு அதன் பின்னர் இஹ்ராம் அணிய வேண்டும்.

10. அன்று லுஹர் நேரத்திற்குள் மினாவிற்கு வந்துவிட வேண்டும். அன்று இரவு மினாவில் தூங்கவேண்டும்.

11. துல் ஹஜ் 9 ஆம் நாள் காலை ஃபஜ்ர் தொழுதுவிட்டு அரஃபா மைதானத்திற்குச் செல்ல வேண்டும். அங்கு லுஹர் மற்றும் அஸர் தொழுகைகளை ஜம்வு கஸராகத் தொழுது விட்டு மக்ரிப் வரை தங்கவேண்டும். குறைந்த பட்சமாக 10 ஆம் நாள் ஃபஜ்ர் தொழுகைக்குள்ளாவது அரஃபா மைதானத்தில் நுழைந்தால் ஹஜ் நிறைவேறும். அரஃபா செல்லவில்லை என்றால் ஹஜ் நிறைவேறாது. சூரியன் மறைந்ததும் அங்கிருந்து புறப்பட்டு முஸ்தலிஃபாவிற்கு வரவேண்டும்.

12. முஸ்தலிஃபாவில் இரவு மக்ரிப் மற்றும் இஷா தொழுகை களை ஜம்வு கஸ்ர் செய்து தொழுதுவிட்டு அங்கு இரவில் தங்கவேண்டும். பின்னர் துல் ஹஜ் 10 ஆம் நாள் யவ்முன் னஹ்ர் அன்று காலையில் ஃபஜ்ர் தொழுதுவிட்டு சூரியன் உதயமானதும் அங்கிருந்து மினாவுக்குப் புறப்பட வேண்டும்.

13. முஸ்தலிஃபாவிலிருந்து வந்ததும் மினாவில் ஜம்ரத்துல் அகபாவை ஏழு சிறிய கற்களால் எறிய வேண்டும். அதன் பின்னர் குர்பான் கொடுக்க வேண்டும். நகம் முடி ஆகியவற்றைக் களைய வேண்டும். தலையை மழித்தல் அல்லது பரவலாகக் குறைத்தல் வேண்டும்.

14. அதன் பின்னர் அங்கிருந்து கஅபாவிற்கு வந்து தவாஃபுல் இஃபாளா செய்ய வேண்டும். இதில் ஏழு சுற்றுக்களிலும் மெதுவாகவே சுற்ற வேண்டும். அதன் பின்னர் மினாவுக்கு வந்து இரவு அங்கு தங்க வேண்டும்.

15. துல் ஹஜ் 11 ஆம் நாள் மினாவிலேயே தங்கி இருக்க வேண்டும். சூரியன் அடி சாய்ந்ததும் ஜம்ராவை கல்லெறியச் செல்ல வேண்டும். 7 கற்கள் வீதம் மூன்று ஜம்ராவுக்கு 21 சிறிய கற்கள் எடுத்துக் கொள்ளவேண்டும்.

16. முதல் அகபாவில் கல்லெறிந்துவிட்டு சிறிது நேரம் அங்கு நின்று துஆ செய்ய வேண்டும். பின்னர் இரண்டாம் அகபாவைக் கல்லெறிந்துவிட்டு அங்கு நின்று சிறிது நேரம் துஆ செய்ய வேண்டும். பின்னர் மூன்றாம் அகபாவை கல்லெறிந்துவிட்டு அங்கு நிற்காமல் சென்றுவிட வேண்டும்.

17. அதன் பின்னர் மினாவில் துல் ஹஜ் 12 மற்றும் 13 நாட்களில் தங்குவதும் தங்காமல் சென்றுவிடுவதும் நம் இஷ்டத்தைப் பொறுத்தது. ஆனால், தங்குவதுதான் சிறந்தது. அப்படி செல்வதாக இருந்தால் 11 ஆம் நாள் மக்ரிப் தொழுவதற்கு முன்னர் மினாவிலிருந்து சென்றுவிடவேண்டும். மக்ரிப் கடந்து விட்டால் செல்லக்கூடாது. பின்னர் துல் ஹஜ் 13 ஆம் நாள் வரை தங்கி அன்று கல்லெறிந்த பின்னரே செல்லவேண்டும்.

18. துல் ஹஜ் 12 மற்றும் 13 ஆகிய நாட்களில் துல் ஹஜ் 11 ஆம் நாள் அகபாவை கல்லெறிந்தது போலவே சூரியன் அடி சாய்ந்ததும், 7 கற்கள் வீதம் 21 கற்களால் மூன்று அகபாவை எறிய வேண்டும்.

19. துல் ஹஜ் 13 ஆம் நாள் அகபாவை கல்லெறிந்தப் பின்னர் தவாஃபுல் விதாஃ செய்துவிட்டுத்தான் நாடு திரும்ப வேண்டும். துல் ஹஜ் 13 ஆம் நாளுக்கு மேலும் அங்கு தங்குபவர்கள் மக்காவை விட்டுப் புறப்படும் நாளன்று தவாஃபுல் விதாஃ செய்ய வேண்டும். அந்த நேரத்தில் பெண்கள் மாதவிலக்காகி விட்டால் அவர்கள் அந்த தவாஃபை செய்ய வேண்டியதில்லை. ஹஜ்ஜின் எல்லா அமல்களும் இத்துடன் முடிந்துவிட்டன.

20. மதீனா செல்வதும் அங்கு அமல்கள் செய்வதும் ஹஜ்ஜுடன் தொடர்புடைய அமல்கள் அல்ல. ஆனால், அங்கு சென்று அமல்கள் செய்தால் அதிகமான நன்மைகள் நமக்கு கிடைக்கும். எனவே இந்த அடிப்படையில் நாம் அங்கு சென்று நல்ல அமல்கள் செய்து அதிகமான நன்மைகளைப் பெறுவோமாக! வல்ல அல்லாஹ் நம் எண்ணங்களையும் அமல்களையும் சீராக்கி வைப்பானாக!